கொலம்பியா ரிகார்டுகளில்

# கண்ணகி

டாக்கீ பாட்டுகள்

U.R. ஜீவரத்னம் பாடிய



GE.6065 — விதியதாம் / மானில மீது

GE.6066 — பூதலம் புகழ் / விதி யாரையும்



மாதவி பாடிய

GE.6068 மலர் மாரனே / அதிரூபமான



கண்ணகி

N.S. கிருஷ்ணன்

T.A. மதுரம் பாடிய

GE.6067. கண்ணன் என்

பிரீதிவிராஜ் டாக்கீ பாட்டு

N.S. கிருஷ்ணன் பாடிய

GE.6067. எந்தனிடது



ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும் :

S. கண்ணன் & கம்பெனி, திருச்சிராப்பள்ளி.

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 2 இதழ் 19

1943 பிப்ரவரி 1

சித்திரபானு ௵ தை௴ 19௳





"இந்தியா தேசத்தின் செல்வம் முழுதும் வேண்டுமா? ஷேக்ஸ்பியர் வேண்டுமா?" என்று என்னைக் கேட்டால், ஷேக்ஸ்பியர்தான் வேண்டும் என்பேன்" என்று ஆங்கிலப் பேராசிரியர் ஒருவர் கூறினாராம். இம்மாதிரி இன்றையத் தமிழ் நாட்டில், "சுயராஜ்யம் வேண்டுமா? பரத நாட்டியக்கலை வேண்டுமா?" என்று கேட்டால் "பரத நாட்டியக் கலைதான் வேண்டும்" என்று சொல்லக் கூடியவர்கள் இருக்கிறார்கள். அவ்வளவு தூரம் பரத நாட்டியம் தமிழ் நாட்டாரின் மனதை இன்று கவர்ந்திருக்கிறது. அப்பேர்ப்பட்ட கலையை நன்றாக முறைப்படி பயின்று தேர்ச்சி பெற்றிருப்பவர்களில் குமாரி ராதாவும் ஒருவர். அடையாறு கலாக்ஷேத்திரத்தில் ஸ்ரீமதி ருக்மணி தேவியின் மேற்பார்வையில் அக்கலையைப் பயின்றவர். சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற இவருடைய நாட்டியக் கச்சேரிகள் ரஸிகர்களால் பெரிதும் பாராட்டப்பட்டன.






# கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்


# என்ன சேதி?

## யுத்த ஜோஸ்யம்

சென்னைக் கவர்னர் சமீபத்தில் தமிழ்நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்து வரும்போது, ஜனங்களுடைய மனதிலிருந்து ஜப்பான் பீதியைப் போக்கும்படியான ஆறுதல் மொழிகளைக் கூறி வந்தார். "யுத்தத்தைப் பற்றி ஜோஸியம் சொல்வது முட்டாள் தனம்; ஆனால், எனக்குத் தெரிந்த வரையில் எதிரிகள் இந்தியாவுக்குள் படையெடுக்கும் சந்தர்ப்பம் மிகக் குறைவு" என்றார். "முக்கியமாக, சென்னை மாகாணத்துக்கு அந்த அபாயம் ரொம்பக் குறைவு" என்றும் தைரியம் கூறினார். சென்ற வருஷத்தில் மூன்று நாளில் சென்னை நகரைக் காலி செய்யப் பண்ணியதை ஞாபகப் படுத்திக் கொள்ளும்போது, இப்போது கவர்னர் துரை இத்தகைய தைரியம் கூறுவது நமக்கு அளவிலாத தைரியத்தை உண்டாக்குகிறது. ஜப்பானியர் ஏன் சென்னை மாகாணத்தில் படையெடுக்க மாட்டார்கள் என்பதற்கு வேறு காரணங்கள் பல இருக்க, ஒரு விசேஷ காரணத்தை நாம் சொல்லக் கூடும். அதாவது அலெக்ஸாந்தர் சக்கரவர்த்தி எதனால் சென்னை மீது படையெடுக்கவில்லையோ, அதே காரணந்தான். சில காலத்திற்கு முன்பு சென்னைக் கலாசாலை ஒன்றில் நடந்த விவாதப் போட்டியில் "அலெக்ஸாந்தர் ஸிந்து நதிக் கரையிலிருந்து கிரீஸுக்கு திரும்பிப் போயிராமல் சென்னைக்கு வந்திருந்தால் என்ன ஆகி யிருக்கும்?" என்று ஒருவர் கேட்டாராம். அதற்கு ஆங்கில புரொபஸர் ஒருவர், "கூவம் நதியின் நாற்றத்தினால் செத்துப் போயிருப்பார்!" என்று பதில் அளித்தாராம். ஜப்பானியர் சென்னைக்கு வரமாட்டார்கள் என்பதற்கும் இதே காரணம் போதுமல்லவா?

## பாய்ந்தாலும் பாயலாம்

நமது சென்னைக் கவர்னரைப்போல் தன்னடக்கம் இல்லாமல் ஐக்ய மாகாண கவர்னர் பின் வரும் யுத்த ஜோஸ்யத்தைக் கூறி யிருக்கிறார்:—

"ஜப்பானியர் ஸாலமன் தீவுகளில் படு தோல்வி யடைந்தால் அப்புறம் அவர்கள் இந்தியாவின் மீது பாய்ந்தாலும் பாய்வார்கள்!"

நேசதேசத் துருப்புகள் ஸாலமன் தீவுகளில் ரொம்ப நிதானமாக முன்னேறும் இரகசியம் இதுதானோ என்னமோ தெரியவில்லை. ஸாலமன் தீவுகளில் நேசத் துருப்புகள் சீக்கிரத்தில் வெற்றி யடைய வேண்டும் என்று நாம் பிரார்த்திக்கலாமா வேண்டாமா என்ற தர்ம சங்கடத்தையும் மேற்படி ஜோஸ்யம் ஏற்படுத்தி விடுகிறது. நிற்க;

ஆஸ்திரேலியா முதன் மந்திரி மிஸ்டர் கர்டின் சமீபத்தில் விடுத்திருக்கும் அறிக்கையோ கைகால் நடுங்கச் செய்வதாயிருக்கிறது. "ஜப்பானியர் தங்களுக்குக் கிடைத்திருக்கும் யுத்த வசதிகளை யெல்லாம் இப்போது உபயோகத்துக்குத் தயாராக்கிக் கொண்டிருக்கிறார்கள்! ஜாக்கிரதை!" என்று அவர் எச்சரித்திருக்கிறார். எது எப்படியானாலும் சென்னையில் கூவம் நதியிருக்கிறது என்ற தைரியத்தை நாம் கைவிடப் போவதில்லை.

## இலங்கை நேயர்களுக்கு

ஜனவரி 10உ "கல்கி" இதழ் இலங்கை நேயர்களுக்கு மிகவும் தாமதித்துக் கிடைத்ததாகத் தெரிகிறது. இதைப்பற்றி விசாரித்ததில் தாமதம் ஏற்பட்டது இந்தியாவுக்கும் இலங்கைக்கும் நடுவில் உள்ள ஸென்ஸார் ஆபீஸில் என்று தெரியவந்தது. "இலங்கை" என்ற பெயர் இருந்தாலே ஸென்ஸார் ஆபீஸில் சந்தேகப்பட்டு நிறுத்தி விடுகிறார்கள்! இதனால் நேயர்களுக்கு ஏற்படும் சிரமத்தை உத்தேசித்து இனிமேல் "இலங்கை" என்ற பெயரையே எந்தக் கட்டுரையிலும் குறிப்பிடுவதில்லை யென்று தீர்மானித்திருக்கிறோம். ஆகவே, அடுத்த இதழிலிருந்து பத்திரிகை தாமதமின்றி இலங்கை நேயர்களுக்குக் கிடைக்குமென்று எதிர் பார்க்கிறோம்.

**ஐந்து ரூபாய் பரிசு:** சென்ற இதழ்க் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: ஜி. கே. ராமன், c/o வி. சுவாமிநாதன், மதிச்சியம் கீழப்பிரிவு, தல்லாக்குளம்.


இந்தியாவின் உணவுப்
பிரச்னையைத்
தீர்ப்பதற்கு ஒரு
நிபுணர் இங்கிலாந்திலிருந்து
தருவிக்கப்படுகிறார்.


சில அற்பப் பத்திரிகைகள் ராஜாஜியைத்
தாக்குவதையே தொழிலாகவைத்துக்
கொண்டிருக்கின்றன.


துருக்கிப்பத்திரிகை கோஷ்டியார்
இந்தியாவில் சுற்றுப்பிரயாணம்
செய்து வருகிறார்கள்.
துருக்கி கோஷ்டி
அதிகார வர்க்கம்.


இந்தியாவைப் பற்றி
50 "உண்மைகள்."
பிரிட்டன்
இந்தியா.
அமெரிக்கா

தம்மைத்தவிர பாக்கி எல்லோரையும் தாக்கிப் பேசினர்.



# பூசு சிவப்பு வர்ணம்!

இந்தப் பூவுலகிலுள்ள ஐந்து கண்டங்களுக்குள்ளே, ஆப்பிரிக்கா என்பது ஒரு கண்டமாகும். இந்த ஆப்பிரிக்கா கண்டத்தைப் பூவுலகப் படங்களில் பார்க்கும்போதெல்லாம் நமக்குச் சொல்ல முடியாத சோகம் உண்டாவதுண்டு. ஏனெனில், படத்தில் ஆப்பிரிக்கா கண்டத்தைக் கண்ட துண்டமாக வெட்டி வெவ்வேறு வர்ணங்களைப் பூசியிருப்பார்கள். "ஆகா! இதென்ன வர்ண வேறுபாடுகள்! சிவப்பு, பச்சை, நீலம், மஞ்சள் என்று கண்ணை உறுத்துகின்றனவே? எல்லாம் ஒரே சிவப்பு வர்ணமாயிருந்தால், பார்ப்பதற்கு எவ்வளவு அழகாயிருக்கும்?" என்று நினைக்கும்போது, நமக்குக் கண்ணீர் கூட வந்துவிடும்.

அடுத்தாற்போல், உதாரணத்துக்கு இந்தியா தேசத்தைப் பார்ப்போம். ஆகா! எவ்வளவு அழகாய் ஒரே சிவப்பு வர்ணம் பூசி விளங்குகிறது? கண்ணுக்கு எவ்வளவு குளிர்ச்சியாயிருக்கிறது! ஒரே இந்தியா! ஒன்றான இந்தியா! இமயமலை முதல் இலங்கைத் தீவு வரையில் ஒரே சிவப்பு நிறமாய் ஜொலிக்கும் இந்தியா! டாக்டர் மூஞ்சி என்ன, வைஸராய் லின்லித்கோ என்ன, ஸர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் என்ன — இப்பேர்ப்பட்டவர்களுக்கெல்லாம் ஆனந்தக்களிப்பை அளிக்கும் ஏக வர்ண இந்தியா! — ஆப்பிரிக்காவுக்கும் இத்தகைய அதிர்ஷ்டம் அடிக்கக்கூடாதோ? தரித்திரம் பிடித்த ஐரோப்பாவின் படத்திலேதான் முப்பத்திரண்டு வர்ணங்களைப் பூசி அசிங்கம் செய்திருக்கிறார்கள்! அது, வெள்ளைக்காரர்களின் தலையெழுத்து! ஆனால், கறுப்பு மனிதர் — நல்ல திவ்யமான கருங்காலிக் கறுப்பு மனிதர்—வசிக்கும் ஆப்பிரிக்காவுக்கு என்ன வந்தது? ஆப்பிரிக்கா கண்டம் முழுவதற்கும் ஒரே திவ்யமான சிவப்பு நிறத்தைப் பூசினால் போதாதோ? பார்க்க லட்சணமாயிராதோ? ......

இப்படியெல்லாம் எத்தனையோ தரம் நாம் எண்ணமிட்டிருக்கிறோம். நம்முடைய எண்ணம் நிறைவேறுங் காலம் கடைசியாக வந்து விட்டதென்றே தோன்றுகிறது. ஆப்பிரிக்காவில் பூசியிருந்த நிறங்களில் ஒரு நிறத்தை இனிமேல் அழித்து விடலாம்! — அழித்து விட்டு அங்கே அழகான சிவப்பு நிறத்தைப் பூசலாம்!

ஆப்பிரிக்காவைத் துண்டம் போட்டுப் பங்கிட்டுக் கொண்டிருந்த ஐரோப்பிய தேசங்களில் இதாலியும் ஒன்று. ஆப்பிரிக்காவில் பிரிட்டன், பிரான்ஸ், இதாலி இந்த மூன்று தேசங்களுக்குத்தான் பெரிய பங்குகள் இருந்தன. செழிப்பான பிரதேசங்களெல்லாம் பிரிட்டனுக்கே வழக்கம்போல் சொந்தமாயிருக்க, ஆப்பிரிக்காவின் பிரம்மாண்டமான பாலைவன சமுத்திரங்களையெல்லாம் பிரான்ஸும் இதாலியும் பங்கு போட்டுக் கொண்டிருந்தன. இதாலி தன்னுடைய ஆப்பிரிக்கா சாம்ராஜ்யத்தைப் பெருக்கிக் கொள்ள வேண்டுமென்னும் பயங்கர துராசையினால் அபிஸீனியா மீது படையெடுத்து அட்டூழியங்கள் செய்தது யாவரும் அறிந்ததே. அதனுடைய பலனை வெகு சீக்கிரத்தில் — முஸோலினியின் காலத்திலேயே — இதாலி அநுபவிக்கிறதைப் பார்க்கிறோம்.

எகிப்தில் பாதி தூரத்துக்கு மேல் வந்திருந்த ரோமலின் படைகள் சில வாரங்களுக்கு முன்னால் வந்த வழியே திரும்பி ஓட ஆரம்பித்தன. எல் அலமீனில் பிடித்த ஓட்டம் டொப்ருக், பெங்காஸி, திரிபோலியில் கூட நிற்கவில்லை. டுனீஸியா எல்லைக்குள் போய்த்தான் ஒருவாறு நின்றிருக்கிறது.

திரிபோலியின்மீது யூனியன் ஜாக் கொடி எப்போது ஏற்றப்பட்டதோ, அப்போது ஆப்பிரிக்காவில் இதாலிய சாம்ராஜ்யம் அஸ்தமனம் ஆயிற்று. ஆப்பிரிக்காவில் இதாலிக்குச் சொந்தமாயிருந்த பிரதேசங்கள் அவ்வளவும் — ஊசி குத்தும் இடம்கூடப் பாக்கியில்லாமல் — பிரிட்டிஷாரின் கைக்கு வந்துவிட்டது.

இப்படி இதாலியிடமிருந்து கைப்பற்றிய ஆப்பிரிக்காப் பிரதேசங்களையெல்லாம் என்ன செய்வது?—ரொம்பவும் யோசிக்க வேண்டிய விஷயந்தான். யுத்த முடிவில் திரும்பவும் இதாலியிடம் ஒப்புவிக்கலாமா? கூடவே கூடாது. அப்படிச் செய்வது மகா பாவமாகும். ஆப்பிரிக்காவில் இதாலிக்கு என்ன உரிமை? அடித்துப் பிடுங்கிய உரிமையைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது. யுத்த நடுவில் அகாரணமாய் தேசக் கட்சியை முதுகுப் புறம் தாக்கிய மகா பாபிகளுக்கு ஆப்பிரிக்காவைத் திருப்பிக் கொடுப்பதா? — ஒருநாளும் கூடாது. பின் என்ன செய்வது?

அந்தப் பிரதேசங்களின் ஜனங்களுக்கே கொடுத்துவிடலாமா?—அந்தப் பாலை வனங்களில் மனிதர்கள் வாழ்கிறார்களா என்பதே சந்தேகம். இருக்கிறவர்கள் நாகரிகமற்ற காட்டுமிராண்டி மனிதர்களாகவே இருப்பார்கள். பிரிட்டிஷ் ஆட்சியில் நூற்றைம்பது வருஷம் பயிற்சி அளிக்கப்பட்ட இந்தியர்கள் — பர்மியர்கள் — இவர்களே இன்னும் சுதந்திரத்துக்குத் தயாராக வில்லையே! அப்படியிருக்க, ஆப்பிரிக்காவின் காட்டுமிராண்டி ஜனங்களிடமா அந்தப் பிரதேசங்களை ஒப்புவிப்பது? மேலும், அப்பிரதேசங்கள் பெரும்பாலும் பாலை வனமாயிருந்த போதிலும், மத்திய தரைக் கடல் ஓரமாயிருப்பதால், மிகவும் முக்கியமானவையாயிற்றே?

ஆகவே இதாலியினிடமிருந்து கைப்பற்றிய ஆப்பிரிக்கப் பிரதேசங்களெல்லாம் பிரிட்டிஷாரின் பாதுகாப்பின் கீழ் இருப்பதுதான் நியாயமாயிருக்கும். படத்தில் மேற்படி பிரதேசங்களுக்கெல்லாம் சிவப்பு மையைக் குழைத்துப் பூசுவது ரொம்பவும் பொருத்தமாயிருக்கும். அப்படிச் செய்துவிட்டால், ஆப்பிரிக்காவில் ஏறக்குறைய பாதிக்கு மேல் சிவப்பு நிறமாகிவிடும்.

சரி. பாக்கியுள்ள ஆப்பிரிக்கப் பிரதேசங்களைப் பற்றி என்ன? அவைகளும் சிவப்பு நிறம் பூசிக்கொள்வதற்கு ஏதேனும் வழி உண்டா?

பாக்கிப் பிரதேசங்களில் மிகப் பெரும் பகுதி பிரான்சுக்குச் சொந்தமானது. ஆனால், எந்தப் பிரான்சுக்கு? ராட்சத ஹிட்லருடன் உறவு கொண்டாடும் விஷி பிரான்சுக்கு அவை சொந்தம் என்று ஒப்புக்கொள்ள முடியாது! — அப்படியானால். பேசாமல் அவையும் சிவப்பு நிறத்தைப் பூசிக்கொள்ள வேண்டியதுதானே?

இல்லை: இந்த நல்ல காரியம் நிறைவேற முடியாதபடி சில 'கந்தர் கோளங்கள்' குறுக்கிடுகின்றன.

சில மாதங்களுக்கு முன்பு வரை பிரஞ்சு ஆப்பிரிக்காப் பிரதேசங்கள் விஷி பிரான்சின் அதிகாரத்தின் கீழ் இருந்து வந்தன. திடீரென்று ஒரு நாள் சில அதிசயச் செய்திகள் வெளியாயின. "பிரஞ்சு ஆப்பிரிக்காவில் அமெரிக்க சைன்யம் வந்து இறங்கிவிட்டது — பிரஞ்சு ஆப்பிரிக்கா அதிகாரிகள் நேசக் கட்சியுடன் சேர்ந்து விட்டார்கள்" என்பதுதான் அச் செய்திகள்.

புதிதாய் நேசக் கட்சியுடன் சேர்ந்த பிரஞ்சுத் தலைவர்களுக்கும், முன்னமே நேசக் கட்சியுடன் சேர்ந்த பிரஞ்சுத் தலைவர்களுக்கும் நடந்து வந்த சண்டைகள் ஒருவாறு நம்பிக்கையை ஊட்டி வந்தன. "இந்த பிரஞ்சுக்காரர்கள் இப்படி ஒற்றுமையின்றிச் சண்டை போட்டுக் கொண்டிருந்தால், பிரஞ்சு ஆப்பிரிக்காவும் சிவப்பு நிறத்தைப் பூசிக் கொள்வதைத் தவிர வேறு வழி என்ன?" என்று தோன்றியது. ஆனால், சமீபத்தில் ஜெனரல் கிராட் — ஜெனரல் டிகால் சந்திப்பு நடந்ததென்றும், அவர்களுக்குள் ஒரு தாற்காலிக சமரசம் ஏற்பட்டிருப்பதாகவும் தெரிகிறது. இப்படி பிரஞ்சுக்காரர்கள் ஒற்றுமைப்பட்டு, யுத்த முடிவு வரையிலும் ஒற்றுமையாகவே இருந்து வந்தால், ஒருவேளை ஆப்பிரிக்காவிலுள்ள பிரஞ்சுப் பிரதேசங்களைப் பிரான்ஸுக்கே கொடுக்க வேண்டி வரலாம். அப்போது ஆப்பிரிக்கா கண்டத்துக்கு. ஒரே சிவப்பு வர்ணத்தைப் பூசிக் கொண்டு யூனியன் ஜாக் கொடியின் கீழ் ஒன்று பட்டு வாழும் பாக்கியம் கிடைக்காமல் போகலாம்.

* * *

ஆப்பிரிக்காவின் வருங் காலத்தைப் பற்றி நாம் இவ்விதம் ஒருபுறத்தில் பெருமையும், இன்னொரு பக்கம் கவலையும் பட்டுக் கொண்டிருக்கும் சமயத்தில், நம் தலையில் திடீரென்று கல்லைத் தூக்கிப் போடுகிறார்கள் சில புண்ணியவான்கள்! உலகப் படத்தில் இந்தியாவின் மேல் பூசியிருக்கும் அழகான சிவப்பு வர்ணத்துக்கு ஆபத்து வரப் போகிறதென்று சொல்கிறார்கள்! அவர்கள் யார் என்றால், பஸிபிக் சமுத்திர மகாநாட்டுக்கு இந்தியா தேசத்தின் 'பிரதிநிதி'களாகச் சர்க்கார் அனுப்பச் சென்று திரும்பியும் வந்திருக்கும் பிரமுகர்கள்தான். இவர்கள் முதலில் கண்டிப்பாக, "இதோ பாருங்கள். பஸிபிக் மகாநாட்டில் என்ன நடந்தது என்பது பரம ரகசியம். அதைப் பற்றி ஒன்றும் கேளாதீர்கள். கேட்டால், சொல்ல மாட்டோம்" என்று வாயைப் பொத்திக் காட்டுகிறார்கள். உடனே, நம்மைப் பார்த்துக் கண்ணடித்து விட்டு, "ஆனால் ஒரு விஷயம் மட்டும் சொல்லி வைக்கிறோம். தெரிந்து வைத்துக் கொள்ளுங்கள். இந்த யுத்த முடிவில் இந்தியா தேசம் சுதந்திரம் அடைவது மட்டும் நிச்சயம்!" என்று மூடு மந்திரமாய்ச் சொல்லிப் புன்னகை புரிகிறார்கள்.

இதைக் கேட்டதும், ''ஐயோ! இந்தியாவின் சிவப்பு நிறத்துக்கு ஆபத்தா?'' என்று நமக்குப் பீதி உண்டாகிறது. ஒரு வேளை பிரிட்டிஷார், ''இனிமேல் ஆப்பிரிக்காவிலேயே வெள்ளைக்காரனுடைய சுமையைச் சுமக்கலாம். இந்தியாவை விட்டொழித்து விடலாம்'' என்று தீர்மானித்து விட்டார்களோ என்று பயப்படுகிறோம்.

''யுத்தம் ஒரு வேளை அதி சீக்கிரத்தில் முடிந்து, இந்திய சுதந்திரம் ரொம்பக் கிட்டத்தில் நெருங்கி விடுமோ?'' என்ற கவலைகூட உண்டாகிறது.

இந்தப் பயத்தினாலும் கவலையினாலும், பிரஞ்சு ஆப்பிரிக்காவைச் சேர்ந்த கஸபிளாங்காவில் கூடிப் பேசிய சர்ச்சிலையும் ரூஸ்வெல்ட்டையும் நோக்கி, யுத்த முடிவைப் பற்றி அவர்கள் என்ன சொல்கிறார்கள் என்று கவனிக்கிறோம். நல்ல வேளையாக, அவர்கள் யுத்தம் திடீரென்று முடிந்து விடும் என்பதாக நமக்குப் பயங்காட்டவில்லை. ஆப்பிரிக்காவிலும் ருஷியாவிலும் ஜெர்மன் நாஜிகளுக்கு நல்ல தோல்விதான். ஆனால், கஸபிளாங்காவிலிருந்தும், ஸ்டாலின் கிராட்டிலிருந்தும் பெர்லின் வெகு தூரம் இருக்கிறது. ஆகவே, சர்ச்சிலும் ரூஸ்வெல்ட்டும் யுத்த முடிவுக்குத் தவணை குறிப்பிடவில்லை. ''அச்சு நாடுகள் நிபந்தனையின்றிச் சரணாகதி அடையும் வரையில் யுத்தத்தை இடைவிடாது நடத்துவோம்'' என்று மட்டுந்தான் சொல்கிறார்கள்.

நல்ல வேளை; யுத்தம் ஐந்தாறு மாதத்துக்குள் முடிந்து நம்மை பிரிட்டிஷார் உடனே கைவிட்டுப் போய்விடுவார்கள் என்ற பயத்துக்கு இடமில்லை. யுத்தம், வருஷக் கணக்காகக் கூட நடக்கலாம்.

இன்னும் கொஞ்சம் நிதானமாக யோசிக்கும்போது, ''யுத்தம் எப்போது முடிந்தால் தான் என்ன? யுத்தம் முடிந்ததும் பிரிட்டிஷாருக்கு அவ்வளவு வைராக்யம் திடீரென்று ஏன் பிறக்க வேண்டும்? ஏன் இந்தியாவைக் கைவிட்டு அவர்கள் போகவேண்டும்? இப்போது அவர்கள் இந்தியாவை விட்டுப் போவதற்குள்ள தடைகள் எல்லாம் அப்போதும் இருக்கத்தானே செய்யும்?'' என்று தைரியம் பிறக்கிறது.

அதோடு, சென்ற ஜனவரி 26உ இந்தியா தேசமெங்கும் நடந்த சம்பவங்களும் ஞாபகம் வருகின்றன. அன்று இந்திய சுதந்திர தினத்தைக் கொண்டாட முயன்றவர்களில் அநேகருக்குத் தட்சணமே ஜெயிலுக்குள் சுதந்திரம் கிடைத்தது! இது ஏன்? யுத்தம் முடிந்ததும் இந்தியாவை அநாதையாய் விட்டுவிட்டுப் போகும் உத்தேசம் மட்டும் பிரிட்டிஷாருக்கு இருந்தால், மேற்படி சுதந்திர தினத்தில் அவ்வளவு தீவிரமான நடவடிக்கைகள் எடுத்திருப்பார்களா? அடுத்த வருஷமோ அதற்கடுத்த வருஷமோ நடக்கப் போகிற காரியத்தைப் பற்றி இந்த வருஷத்தில் பேசவே கூடாதென்று தடை செய்திருப்பார்களா?

ஆகவே, பிரிட்டிஷார் யுத்தத்தில் ஜயித்தவுடனே இந்தியாவைத் தனியாகத் தவிக்க விட்டுப் போய்விடுவார்கள் என்ற பயத்துக்குக் கொஞ்சமும் இடமில்லை. அத்தகைய உத்தேசமும் அவர்களுக்கு இருக்க முடியாது.

எனவே, இந்தியாவின் சிவப்பு நிறத்துக்கு ஆபத்து வருவதானால், யுத்தம் முடிவதற்கு முன்னாலேயே வந்தால் தான் வந்தது. அதாவது யுத்தம் முடிவதற்கு முன்னால் காங்கிரஸ் தலைவர்கள் சிறையிலிருந்து வெளிவரவேண்டும்; காங்கிரஸ்—முஸ்லிம் லீக் சமரசம் ஏற்படவேண்டும். இந்திய சர்க்கார் தேசிய சர்க்காராய் ஆகவேண்டும். அதாவது உண்மையான தேசத் தலைவர்கள் சர்க்காரை நடத்த வேண்டும். அப்போது யுத்த முடிவில் நடக்கும் புனர் நிர்மாண மகாநாடுகளில் நமது தேசத் தலைவர்களுக்குச் செல்வாக்கு இருக்கும். அப்போதுதான் இந்தியாவுக்குச் சுதந்திர அபாயம் உண்டு.

இப்படியெல்லாம் நடக்க வேண்டுமென்று சொல்லிக் கொண்டிருக்கும் ஒரு மனுஷர் இருப்பது உண்மைதான். திருப்பித் திருப்பி இதே பல்லவியை அவர் பாடிக் கொண்டிருக்கிறார். ஆனால், வைஸராய் லின்லித்கோ, வீர சவர்க்கார், டாக்டர் மூஞ்சி, அகண்ட முன்ஷி, ஜனாப் ஜின்னா, திவான் ஸி. பி.—இவ்வளவு பேரும் சேர்ந்து போடும் கூச்சலில், மேற்படி ஒற்றை மனிதரின் தனி குரல் யார் காதில் விழப் போகிறது?

ஆகவே, ஆப்பிரிக்காவில் எவ்வளவுதான் விஸ்தாரமாக சிவப்பு வர்ணம் பரவிய போதிலும், இந்தியாவின் சிவப்பு வர்ணத்துக்கு இப்போதைக்கு அவ்வளவு பயமில்லையென்றுதான் தோன்றுகிறது. அப்புறம், பகவான் இருக்கிறார்!

# அக்கப் போர்

"காசி"

ஒரு சமயம் இத்தாலியத் துருப்புகள் சண்டை போட்டுக் கொண்டிருந்ததை ஒரு ஜெர்மன் சேனாபதியும், இத்தாலிய சேனாபதியும் ஒரு மலையின் மேல் நின்று கவனித்துக் கொண்டிருந்தனர். திடீரென்று ஜெர்மன் சேனாதிபதி "அவர்கள் ஓட்டமாய் ஓடுகிறார்கள்! இத்தாலியர்கள் ஓடிக்கொண்டிருக்கிறார்கள்!" என்றார். இத்தாலிய சேனாபதி இதைக் கேட்டு ஆச்சர்யப்பட்டுப்போய்த் தமது தூரக் கண்ணாடியால் ஓடுகிறவர்கள் யாரென்று நன்றாய்க் கவனித்தார். அவர் முகத்தில் சந்தோஷம் தோன்றிற்று. "ஓடுகிறார்கள், வாஸ்தவந்தான். ஆனால் சிங்கம் மாதிரி ஓடுகிறார்களாக்கும்!" என்று பெருமையுடன் கூறினாராம்.

இன்றோ? ஜெர்மன் ஜெனரல் ரோமெல் ஒன்றாம் நம்பர் சிங்கம் மாதிரி ஓடிக் கொண்டிருக்கிறார்.

"ஆமாம்! ரோமெல் இப்படி ஓடுவதின் மர்மம் என்ன? ஏதாவது இல்லாமல் போகாது!" என்று சில மேதாவிகள் சொல்லிக் கொண்டேயிருக்கிறார்கள். தெருவில் போகும் பையனைக் கேட்டால், "'ஓடிப் போனவனுக்கு ஒன்பதாம் மடத்தில் ராஜா' என்னும் பழமொழியை உத்தேசித்துத்தான் ஓடுகிறார்!" என்கிறான்.

* * *

யுத்தம் எப்போது முடியப் போகிறது? ஹிட்லரின் பழைய பிரசங்கங்களின்படி அது 1941ம் வருஷத்திலேயே முடிந்திருக்க வேண்டும். சென்ற வருஷம் சர்ச்சில், ரூஸ்வெல்ட், ஸ்மட்ஸ் முதலியவர்கள் பேசியதைக் கேட்டு இந்த வருஷமே யுத்தம் முடிந்து விடுமோவென்று யுத்த கண்டிராக்டர்கள் பயந்து கொண்டிருந்தார்கள். ஆனால் நல்ல வேளை, அப்படியொன்றும் ஆபத்து நேராது போலிருக்கிறது. ஏனென்றால் கஸாபிளாங்காவில் பத்து தினங்கள் இடைவிடாமல் கூடிப் பேசிய சர்ச்சிலும் ரூஸ்வெல்ட்டும் இந்த வருஷம் யுத்தத்தில் மிக மிக மும்முரமாகத் தாக்குவதற்கான ஏற்பாடுகளைப் பற்றித்தான் தீவிரமாகப் பேசி ஒருமுகமான முடிவிற்கு வந்திருக்கிறார்களாம். அதாவது யுத்தம் எப்போது முடியுமென்று இவர்களாலும் சொல்ல முடியவில்லை.

சென்ற மகா யுத்தத்தின்போது நேசத் துருப்புகளின் தலைவரான மார்ஷல் போச் துரையின் மோட்டார் ஓட்டியான பியரி என்பவனைப் பலர் "யுத்தம் எப்போது முடியப் போகிறது? மார்ஷல் என்ன சொல்கிறார்?" என்று விசாரித்துக் கொண்டிருந்தார்களாம். அதற்கு அவன் "அவர் யுத்த முடிவைப் பற்றிப் பேசவே இல்லை. அவர் ஏதாவது சொன்னால் உடனே உங்களுக்குத் தெரிவிக்கிறேன்" என்று கூறி வந்தான். சில தினங்கள் கழித்து அவன் "இன்று மார்ஷல் யுத்த முடிவைப் பற்றிப் பிரஸ்தாபித்தார்" என்றான். எல்லோரும் "என்ன சொன்னார்? என்ன சொன்னார்?" என்று ஆவலுடன் விசாரித்தார்கள். "மார்ஷல் என்னைக் கூப்பிட்டு 'என் பியரி! யுத்தம் எப்பொழுது முடியும், சொல் பார்க்கலாம்!' என்று கேட்டார்" என்றானாம்.

* * *

சென்ற மாதம் லண்டனில் எதிரி விமானங்கள் படையெடுத்து வந்தபோது பொது ஜனங்கள் ஏ. ஆர். பி. விதிகளைச் சரிவர அனுசரிக்கவில்லையாம். ஆனால் சென்னையைப் பற்றி இப்படியொன்றும் குறை கூற முடியாது. ஓர் உதாரணம் கேளுங்கள்.

21-1-43-ந் தேதி யன்று சென்னையில் ஏ. ஆர். பி. ஒத்திகைப் பயிற்சி நடத்தினார்களல்லவா? அன்று அபாயச் சங்கு ஊதிற்றோ இல்லையோ மாம்பலத்தில் ஒரு தெருவில் பூட்டியிருந்த வீட்டை உடைத்துக் கொண்டு ஒருவன் உள்ளே போனானாம். மறுபடியும் "ஆல் கிளியர்" சங்கு ஊதியபோது அவன் திருடிய சாமான்களை எடுத்துக் கொண்டு வெளியே போய்விட்டதாகச் சொல்கிறார்கள்.

அந்தத் தெருக்காரர்கள் ஏ. ஆர். பி. விதிகளைக் கண்டிப்பாய் அநுசரித்து, தெருப் பக்கம் எட்டிக்கூடப் பார்க்கவில்லையென்பதற்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

* * *

பம்பாயில் ஒரு குடும்பத்தில் ஒரு மாதத்துக்கு மேற்பட்ட உணவுப் பொருள்களை 'ஸ்டாக்' செய்து வைத்திருந்தால் மூன்று மாதம் சிறைவாசத் தண்டனை விதிக்கப்படுமாம். மூன்று மாதத்துக்கு உணவு சேக

ரித்து வைத்துக் கொள்ளும் பொறுப்பை சர்க்கார் ஏற்றுக் கொண்டு விடுகிறார்களல்லவா?

*　　*　　*

“நாவிக்கிலிருந்து பிரிட்டிஷ் துருப்புகள் வாபஸ்” என்று ஒரு பத்திரிகைத் தலைப்புக் கூறுகிறது. பூகோள புஸ்தகத்தைப் புரட்டிப் பார்த்ததில் காவிக் என்பது பிரிட்டிஷ் துருப்புகள் யுத்தஞ் செய்யும் வட ஆபிரிக்காவிலோ, பர்மாவிலோ, கடல்களுரிலோ இல்லையென்றும் இந்தியாவில்தான் இருக்கிறது என்றும் தெரிய வருகிறது.

*　　*　　*

சர்க்கார் புதிதாக வெளியிடப் போகும் காலணா நாணயங்களின் எடை பழைய நாணயங்களின் எடையில் பாதிக்கும் குறைவாகத்தான் இருக்குமாம். ஆனாலும் பூவோ, தலையோ என்று போட்டுப் பார்க்கும்போது காற்றில் பறந்து போய்விடாது என்று நம்புகிறேன்.

ஆனால் இனிமேல் “பூவோ தலையோ” என்ற வசனத்தை நாம் உபயோகிப்பதற்கில்லை. “முடியோ இலையோ” என்றுதான் சொல்ல வேண்டியிருக்கும். ஏனென்றால் புதிய நாணயங்களில் ஒரு பக்கத்தில் கிரீடமும், மற்றொரு பக்கத்தில் திராட்சை இலையும் போட்டிருக்குமாம்.

*　　*　　*

இந்தப் புது நாணயங்களில் எனக்கு மிகவும் பிடித்த விஷயம் அதன் நடுவில் துவாரமிருப்பதுதான். ஏனென்றால் அது பலவிதத்தில் உபயோகமாகிறது. முதலில் காலராவைத் தடுக்க அந்த நாணயங்களை உபயோகிக்கலாம். செப்புக் காசை ஒரு கயிற்றில் கோத்து அது தேகத்தில் படும்படி கட்டிக் கொண்டால் காலரா நிவாரணமாகுமென்று ஒரு பிரபல அமெரிக்க டாக்டர் அபிப்பிராயப் படுகிறாராம்.

இந்த நாணயங்களை மணிபர்ஸில் வைத்துக் கொள்ளவேண்டிய தொல்லையே இல்லை. ‘காசமாலை’ மாதிரி கழுத்தில் கோத்துப் போட்டுக் கொண்டால் வேண்டும்போது ஒவ்வொன்றாகக் கழற்றிக் கொடுக்கலாம்.

நகையாகக் கழுத்தில் போட்டுக் கொண்டு விட்டாலோ பிறகு சில்லறை நாணயங்களைச் சேமித்து வைத்துக் கொண்டதற்காக சர்க்கார் நடவடிக்கை எடுக்க முடியாது!



# ஆடல் பாடல்

"கர்நாடகம்"



## பக்த போதனா

சில நாளைக்கு முன்பு ஸர் அல்லாடி கிருஷ்ணசாமி ஐயரும், மற்றொரு பெரியாரும் பேசிக் கொண்டிருந்தபோது, நான் பக்கத்தில் இருக்க நேர்ந்தது. பணத்தையும் அதிகாரத்தையும் துச்சமாக நினைக்கும் வித்வத்தைப் பற்றிப் பேச்சு. அதற்கு ஒரு உதாரணம் சொல்ல வேண்டிய அவசியம் நேர்ந்ததும், ஸர் அல்லாடி, "போதனா இருக்கவில்லையோ? அந்த மாதிரி!" என்றார் பளிச்சென்று. எனக்கு உடனே ஆந்திரர்கள் அவர்களுடைய தாய் பாஷையிலும், தாய் பாஷை வித்வான்களிடத்திலும் எவ்வளவு பக்தி வைத்திருக்கிறார்கள் என்ற எண்ணம் தோன்றியது. இம் மாதிரி சந்தர்ப்பத்தில் நம்மில் எத்தனை பேருக்குக் கம்பரைக் குறிப்பிடத் தோன்றியிருக்கும்?

"மன்னவனும் நீயோ
வளநாடும் உன்னதோ
உன்னை யறிந்தோ தமிழை
ஓதினேன்?"

என்று கூறிய தீரக் கவியின் ஞாபகந்தான் எத்தனை பேருக்கு வந்திருக்கும்? நிற்க.

"போதனா இருக்கவில்லையோ?" என்று ஸர் அல்லாடி ஒரு மாதத்துக்கு முன்பு சொல்லியிருந்தால், எனக்கு அது அர்த்தமே ஆகியிருக்காது. போதனா என்றால் மனிதனா, மரமா, அல்லது வசவா என்றுகூடச் சொல்லியிருக்க முடியாது. சில நாளைக்கு முன்பு பாரகன் தியேட்டரில் 'பக்த போதனா'' என்னும் தெலுங்கு டாக்கியைப் பார்த்திருக்க படியால், விஷயம் இன்னதென்று புரிந்து கொள்ள முடிந்தது.

போதனா என்பவர் பரம பக்தர்; சிறந்த கவிஞர். இந்த இரண்டு அம்சங்களில் ஒன்று இருந்தாலே ஒரு மனுஷர் ஏழையாய்த்தானிருக்க முடியும். இரண்டும் சேர்ந்துவிட்டால் கேட்க வேண்டுமா?

போதனாவுக்கு ஸ்ரீமத் பாகவதத்தைத் தெலுங்கு பாஷையில் செய்யவேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. பகவானுடைய அருளினால் அது கைகூடிற்று. திவ்யமான தெலுங்கு பத்தியங்களில் பாகவதத்தை அருமையாகப் பாடி விட்டார்.

போதனாவுக்கு மைத்துனர் ஸ்ரீநாத கவி என்று ஒருவர். அவர் சிங்கபூபாலன் என்னும் அரசனின் சமஸ்தானக் கவி. போதனாவின் பாகவதத்தை ராஜாவுக்கு சமர்ப்பணம் செய்தால், அவருடைய தரித்திரம் நீங்குமே என்று ஸ்ரீநாத கவி எண்ணுகிறார். போதனாவுக்கு அவ்விதமே போதனை செய்கிறார். போதனா அதற்கு இணங்கவில்லை. "ஏற்கெனவே பகவானுக்கு அர்ப்பணம் செய்து விட்டேன்" என்று காரணம் சொல்கிறார்! ஸ்ரீநாத கவியின் பெண், போதனாவின் வீட்டில் வளர்ந்து வருகிறாள். அவளுக்கும் போதனாவின் புத்திரனுக்கும் காதல் வளர்ந்து வருகிறது. "ஏழைப் பிள்ளைக்குப் பெண்ணைக் கொடுக்க மாட்டேன்" என்று ஸ்ரீநாத கவி தன் பெண்ணை அழைத்துப் போகிறார். போதனாவைச் சிங்கபூபால ராஜா குடும்பத்தோடு தேசப்பிரஷ்டம் செய்து விடுகிறான். போதனா இந்தச் சோதனைகளுக்கெல்லாம் ஈடு கொடுக்கிறார். கடைசியில், பகவானுடைய அருளால் எல்லாம் சுபமாக முடிகிறது.

இந்தச் சரித்திரத்தை வாஹினி பிக்சர்ஸ்காரர்கள் மிகவும் உயர்தர டாக்கியாக எடுத்திருக்கிறார்கள். பாஷை தெரியாவிட்டாலும், கதைப் போக்கை நன்றாய்த் தெரிந்து கொள்ளும்படி யிருக்கிறது. போதனாவாக நடிக்கும் ஸ்ரீ நாகையாதான் அடியிலிருந்து கடைசி வரையில் படத்தின் பெருமையையெல்லாம் கொள்ளை யடிக்கிறார்! இதற்கு முன்னால் பல தெலுங்குப் படங்களிலும், ஒரு தமிழ்ப் படத்திலுங் கூட ஸ்ரீ நாகையாவைப் பார்த்திருக்கிறோம். அவருடைய நடிப்புத் திறமை இந்தப் படத்திலேதான் பரிபூரணமாய் விளங்குகிறது.

டைரக்டரின் திறமையையும் படம் முழுவதிலும் காண்கிறோம். முதலில் கொஞ்ச நேரம் கதை ரொம்ப மெதுவாக நடப்பதாய்த் தோன்றுகிறது. வர வர வேக மடைந்து நம்மை உணர்ச்சி வெள்ளத்தில் அடித்துக் கொண்டு போகிறது. உணர்ச்சி ததும்பும்



போதனாவின் மகன்

உயர்தர நடிப்பைப் பல இடங்களில் காண்கிறோம். ஸ்ரீநாத கவி, தம்முடைய பெண்ணைப் போதனாவின் வீட்டிலிருந்து அழைத்துக் கொண்டு கிளம்புகிறார். அந்தப் பெண், போதனாவின் மகனிடம் சொல்லிக் கொள்ளப் போகிறாள். அவனுக்குப் பக்கத்தில் போய்ச் சற்று நேரம் சும்மா நிற்கிறாள். பையனோ திரும்பிப் பார்க்கவேயில்லை. பிறகு, ஏதோ வார்த்தை சொல்கிறாள். உடனே, பிள்ளையாண்டான் எழுந்திருந்து அவளைப் பார்க்காமலே விடுவிடு வென்று நடந்து போகிறான்! புண்பட்ட அவனுடைய காதல் உள்ளத்தை இதைக் காட்டிலும் அழகாகவும் உயர்தரமாகவும் காட்டியிருக்க முடியாது.

படம் பார்த்தபோது என் பக்கத்தில் ஒரு ஆந்திர கனவான் உட்கார்ந்திருந்தார். படத்தில் வந்த சம்பாஷணைகளை அவர் வெகுவாக ரஸித்துக்கொண்டு வந்தார். அவ்வளவு நன்றாய் நான் புரிந்துகொள்ள வில்லையென்று தெரிந்ததும், எனக்குச் சொல்ல ஆரம்பித்து விட்டார். ஒரே ஒரு இடத்தில் அவர் சொல்லாமலே எனக்குக் கூட சம்பாஷணை தெளிவாகப் புரிந்தது. போதனாவைப் பார்த்து யாரோ, "ஆந்திர பாஷைக்கும், ஆந்திர ஜாதிக்கும் உம்மால் எவ்வளவு சிறப்பு ஏற்பட்டு விட்டது?" என்று சொல்கிறார்கள். இந்த கட்டத்தில் என் அருகிலிருந்த ஆந்திரர் நாற்காலி கொள்ளாதபடி பூரித்துப் போய் விட்டார். அவருக்கு வந்த பெருமையில் எனக்கு மொழி பெயர்த்துச் சொல்லக் கூட மறந்து விட்டார்.

எனக்கோ, இந்தப் படத்தைப் பார்த்துக் கொண்டிருந்த போதெல்லாம் அடிக்கடி ஓர் எண்ணம் தோன்றிக் கொண்டிருந்தது. "ஆந்திரர்கள் தங்கள் பெரியார்களின் சரிதங்களை இவ்வளவு நன்றாய்ப் படம் எடுக்கிறார்களே? தமிழ் டாக்கிக்காரர்கள் மட்டும் தமிழ்ப் பெரியார்களின் புனித சரித்திரங்களை ஏன் இப்படிக் கொலை செய்கிறார்கள்?" என்னும் நினைவு மனதை உறுத்திக் கொண்டேயிருந்தது.

நந்தனார் பரம பக்தர்; அவருடைய சரித்திரம் பக்த போதனாவின் சரித்திரத்தைக் காட்டிலும் உணர்ச்சி மிகுந்தது; நாடகக் கட்டங்கள் நிறைந்தது.

சில மாதங்களுக்கு முன்பு "நந்தனார்" தமிழ்ப் படம் ஒன்று வெளியாயிற்று. இந்தப் படத்தில் பரம பக்தனாகிய நந்தனைக் கள்ளுப் பானைக்குள்ளேயே போட்டு முழுக்கி எடுத்திருந்தார்கள்! படம் நெடுக, கள்ளின் மகிமையும் களியாட்டமுமாகவே இருந்தது. "உயரச் சிகரக் கும்பம் தெரியுதாம்!" என்று நந்தன் பக்தி பரவசமடையும் இடத்தில், யாராவது கோவிலையும் கோபுரத்தையும் நினைத்துக் கொண்டு விட்டால் என்ன செய்கிறது என்று, தென்னை மரத்து உச்சியில் தொங்கும் கள்ளுப் பானையை ஞாபகப்படுத்தியிருந்தது! 'ஹாஸ்ய' கட்டங்களோ, கேட்க வேண்டியதில்லை. அரையில் கட்டியிருக்கும் வேஷ்டிக்குள் எலி புகுந்து கொண்ட ஹாஸ்யத்தை மிருகப் பிராயத்திலுள்ளவர்களே அநுபவிக்கக்கூடும். பார்ப்பனக் காரியஸ்தன் ஹரிஜனப் பெண்ணைப் பார்த்துப் பல்லை இளிக்கும் மகா மட்டமான காட்சி ஒன்று; பிராம்மண ஜாதி, ஹரிஜன் ஜாதி இரண்டுக்கும் அவமானம் உண்டாக்குவது.— இவ்வளவு ஆபாசங்களுக்கு மத்தியில் ஏழை நந்தன் அகப்பட்டுக்கொண்டு தவிக்கிறான்.

இந்தப் படத்தில் நந்தனாக நடித்தவர் ஸ்ரீ தண்டபாணி தேசிகர். கல்லும் கனியுமாறு பாடக் கூடியவர். அவ்விதமே பாடியிருக்கிறார்; உணர்ச்சி ததும்ப நடித்திருக்கிறார். ஆனால், என்ன பிரயோஜனம்? ஸ்ரீ தண்டபாணி தேசிகர் கன்னத்தில் போட்டுக்



அவன் காதலித்த பெண்

சொல்வதுபோல் சென்னைச் சுவர்களில் ஒரு விளம்பரப் படம் ஒட்டியிருந்தது. இது எவ்வளவு பொருத்தம் என்று டாக்கியைப் பார்த்த பிறகுதான் எனக்குத் தெரிந்தது. "இவ்வளவு ஆபாசங்களுக்கிடையில் நான் நந்தனை நடித்தேனே, அது தப்பு, தப்பு!" என்று தேசிகர் கன்னத்தில் போட்டுக்கொள்ள வேண்டியது ரொம்ப அவசியந்தான்.

நேயர்களில் பலர் தேசிகர் நடித்த நந்தனார் டாக்கியைப் பார்த்திருக்கலாம். சௌகரியப்பட்டவர்கள் வாஹினி போதனாவையும் பாருங்கள். பார்த்தால் பின்வரும் திட்டமான முடிவுகளுக்குத்தான் வருவீர்கள்:—

(1) ஒரு பக்தரின் சரித்திரத்தை எப்படிப் படம் எடுக்கக் கூடாதென்பதற்கு உதாரணமாயிருப்பது நந்தனார்—தமிழ் டாக்கி.

(2) ஒரு பக்தரின் சரித்திரத்தை எப்படிப் படம் பிடிக்கவேண்டும் என்பதற்கு உதாரணமாக அமைந்திருப்பது போதனா — தெலுங்கு டாக்கி.

## கேட்டுப் பாருங்கள்!

சென்ற வாரத்தில் கேட்டுப் பார்த்தவைகளில், திருவையாற்றில் நடந்த தியாகராஜ உற்சவக் கச்சேரிகளின் அஞ்சலை முக்கியமாகக் குறிப்பிடவேண்டும். ரேடியோ நிலையங்களின் மேல் நமக்கெல்லாம் எவ்வளவு குறைகள் இருந்தாலும் இம்மாதிரி நல்ல சேவை செய்யும் சமயத்தில் அக் குறைகளையெல்லாம் மறந்து விடுகிறோம்.

ஆராதனை தினத்தன்று காலை நமது சங்கீத வித்வான்கள் பலர் தியாகராஜ சமாதியின் சந்நிதியில் பக்தி பரவசத்துடன் கானம் செய்ததைக் கேட்டோம். அவற்றுள் முக்கியமாக, மகாராஜபுரம் விசுநாதய்யர் அவர்கள் "வாடோரா" கீர்த்தனம் பாடியதைக் குறிப்பிட்டே யாகவேண்டும்.

"வாடோரா — வாங்கோ
தெய்வமு மனவிரா — வாணும்
ஆடின மாடலு—இப்படி வந்துடணும்"

இவ்விதம் தியாகராஜ கிருதியில் சொந்த சாஹித்யத்தையும் கலந்து வெளுத்து வாங்கினார் மகாராஜபுரம்!

அன்றிரவு எட்டு மணிக்குச் சித்தூர் சுப்பிரமணியப் பிள்ளை அநேக பக்க வாத்தியங்களுடன் செய்த கச்சேரி நன்றாயிருந்தது. இராத்திரி பத்து மணிக்கு ஆலத்தூர் சகோதரர்களின் கச்சேரி பிரமாதம். ஸ்வரமாவது ஸ்வரம்! நான் கையைத் தட்ட வேண்டுமென்று எண்ணியபோதெல்லாம், சபையிலும் பிரமாத கரகோஷம் எழுந்ததைக் கேட்டேன். சபையில் நல்ல ரஸிகர்கள் சேர்ந்திருந்தார்கள் என்று தெரிந்தது. பத்தரை மணிக்கு "வாழ்வை நம்பாதே!" என்ற பாட்டுடன் கச்சேரியைச் சகோதரர்கள் முடிக்க எண்ணியபோது, சபையிலிருந்து, "கச்சேரியை நிறுத்தவேண்டாம்; இன்னும் பாடவேண்டும்!" என்று பல குரல்கள் எழுந்தன. முடிவு என்ன ஆயிற்று என்று தெரியாதபடி ரேடியோ அஞ்சல் முடிந்து விட்டது.

மேற்படி கச்சேரியை இவ்வளவு பிரமாதமாக்குவதற்கு ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை பிடிலும், பழனி சுப்பிரமணியப் பிள்ளை மிருதங்கமும் உதவி செய்தன. 'சப்புடு' சில சமயம் அபாரமாய் மிருதங்கம் வாசித்தபோது நமக்கு மூச்சே நின்றுவிடும்போல் ஆகிவிட்டது. விரல்களில் அவ்வளவு வேகம்!

மொத்தத்தில் இந்த வருஷத்துத் தியாகராஜ உற்சவக் கச்சேரிகளில் மிருதங்கம் உச்சஸ்தானத்தை வகித்தது. மிருதங்கத்துக்குத் தொண்டை கட்டுவதில்லை யென்பது என்ன சௌகரியம் பாருங்கள்!

* * *

பிப்ரவரி 1உ திருச்சியில் டி. ஆர். மகாலிங்கம் புல்லாங்குழல்.

2உ சென்னையில் ஸ்ரீமதி வஸந்தகோகிலம் பாட்டு.

3உ சென்னையில் செம்பொன்னார் கோவில் கோவிந்தசாமி சகோதரர்கள் நாதஸ்வரம். திருச்சியில் ஸ்ரீ எம். தியாகராஜன் பாட்டும், டி. டி. சங்கரய்யர் வயலினும்.

4உ புரந்தர தாஸர் தினம். சென்னையில் ஸ்ரீமதி லலிதாங்கியும் வஸந்தகுமாரியும் புரந்தர தாஸ் பதங்கள் பாடுகிறார்கள். திருச்சியில் திருச்சி சகோதரர்கள் சக்கைப்போடு போடுகிறார்கள்.

5உ சென்னையில் ஸ்ரீ கே. எஸ். ராமநாராயணய்யர் இருமுறைக் கச்சேரி.

6உ சென்னையில் ஸ்ரீ எஸ். வி. பார்த்தசாரதியின் முழு நேரக் கச்சேரி.

7உ சென்னையில் ஸ்ரீமதி அபிராம சுந்தரி வயலின்.

8உ திருச்சியில் கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளையின் பிடில்; குத்தாலம் சிவ வடிவேலுப் பிள்ளை மிருதங்கம்.

9உ சென்னையில் த்வாரம் வெங்கடசாமி நாயுடு பிடில். திருச்சியில் இரவு 10-மணிக்கு மதுரை மணி ஐயர் கச்சேரி—இசைத்தட்டில்.




### இந்தியாவிற்கென்றே தயாரிக்கப்பட்டுள்ளன!

வெஸ்ட் எண்டு கடிகாரங்கள் சரியான மணியைக் காட்டி வருவது நாம் பெருமை படையக் கூடிய விஷயங்களில் ஒன்றாகும்! இத் தன்மை ஐம்பது வருட காலங்களுக்கு மேலாக காப்பாற்றப்பட்டு வருவது மன்றி, இன்றும் எப்பொழும் போல் பாதுகாக்கப்பட்டு வருகிறது. வெஸ்ட் எண்டு கடிகாரங்களின் மேன்மையான வேலைப்பாடும், உயர்தர மூலப் பொருள்களும் கலந்து அமைந்திருப்பதே இதற்குகந்த அத்தாட்சி. உயர்தர சேவையுடன் அவைகள் எந்த வகை சீதோஷ்ண நிலைமையிலும் சரியான மணியைக் காண்பித்து வருவதும் மற்றொரு குணமாகும். இந்தியாவின் நிலைமைக்கேற்ப எல்லா வெஸ்ட் எண்டு கடிகாரங்களும் செவ்வனச் செய்யப்பட்டிருப்பதால்தான் எதிர்பார்த்ததைவிட பூரண திருப்தியை அவைகள் அளிக்க முடிகின்றன. படங்களுடன் கூடிய கேட்லாக் வேண்டுபவர்களுக்கு இலவசமாக அனுப்பி வைக்கப்படும்.



**நியூ பிஜோ**

18 காரட் சாலிட் கோல்டு ...ரூ. 298

ரேடியம் டயலும் முட்களும் கூடிய எந்த ரகத்திற்கும் ரூ. 3 பிரத்தியேகம்.



**பிஜோ "ட்வின் டயல்"**

பேடண்ட் எவர்பிரைட் ஸ்டீல் ரூ. 124
18 காரட் சாலிட் கோல்டு ... ரூ. 270

வெஸ்ட் எண்டு வாட்ச் கோ.

பம்பாய் — கல்கத்தா

# WEST END WATCH Co

BOMBAY CALCUTTA



# பார்த்திபன் கனவு

கல்கி



## முப்பத்தாறாம் அத்தியாயம்

## — பலி பீடம் —

இத்தனை காலமாய் இந்தக் கதையைப் பொறுமையுடன் வாசித்து வந்திருக்கும் நேயர்களுக்கு ஒரு விண்ணப்பம். கதையின் முடிவு நெருங்குகிற சமயத்தில், நேயர்களுக்கு அருவருப்பை அளிக்கக்கூடிய சில கோர சம்பவங்களை நாம் விவரிக்க வேண்டியதாயிருக்கிறது. கற்பனா சக்தியைக் கொண்டு மட்டும் புனைந்த கதையாயிருக்கும் பட்சத்தில், படிப்பதற்கு ரம்யமாயுள்ள விஷயங்களை மட்டும் எழுதிக்கொண்டு போகலாம். நாம் எழுதுவது சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்ட வரலாறானபடியால், உள்ளது உள்ளபடியே எழுத வேண்டியிருக்கிறது.

இராமன் வாழ்ந்த காலத்தில் இராவணனும், கிருஷ்ண பரமாத்மா வாழ்ந்த காலத்தில் கம்ஸன், சிசுபாலன், முரன் முதலியவர்களும் இருந்தது போலவே, பண்டைத் தமிழகத்தில் ஆழ்வார்களும் நாயன்மார்களும் தோன்றி தெய்வீகத் தீஞ்சுவைத் தமிழ்ப் பாடல்களைப் பாடி பக்தி மதத்தைப் பரப்பி வந்த அதே காலத்தில், பல்லவர் ஆட்சியின் கீழ் சிற்பம், சித்திரம், நடனம் ஆகிய அருங் கலைகள் சிறந்தோங்கி வந்த அதே காலத்தில், இன்னொரு பக்கம் காபாலிகம், நரபலி ஆகிய பயங்கர அநாகரிகக் கோட்பாடுகளும் ஓரளவு குடி கொண்டிருந்தன. இந்த அத்தியாயத்தில் அத்தகைய பயங்கரச் செயல் நடக்கும் இடத்துக்கு விக்கிரமனையும் பொன்னனையும் தொடர்ந்து நாமும் போக வேண்டியதாயிருக்கிறது.

*  *  *

காட்டாற்றங் கரையோடு மேற்கு நோக்கி இரண்டு நாழிகை வழி தூரம் போனதும் குள்ளன் தென்புறமாகத் திரும்பி அடர்ந்த காட்டுக்குள் புகுந்து சென்றான். காட்டைத் தாண்டியதும் அப்பால் ஒரு பெரிய மேடு இருந்தது. அந்த மேட்டின் மேல் குள்ளன் வெகு லாகவமாக ஏறினான். குதிரைகள் ஏறுவதற்குக் கொஞ்சம் சிரமப்பட்டன. மேட்டின் மேல் ஏறியதும், அது ஒரு ஏரிக்கரை என்று தெரிந்தது. "அதோ!" என்று குள்ளன் சுட்டிக் காட்டிய இடத்தை விக்கிரமனும் பொன்னனும் நோக்கினார்கள். மொட்டை மொட்டையான மலைக் குன்றுகளும், அவற்றின் அடிவாரத்தில் அடர்த்தியாக வளர்ந்திருந்த குட்டையான மரங்களும், நூற்றுக் கணக்கான தீவர்த்திகளின் வெளிச்சத்தில் அரைகுறையாகத் தெரிந்தன. அந்த மலையடிவாரக் காட்டில் நடமாடிக் கொண்டிருந்த உருவங்கள் மனிதர்களாய்த் தானிருக்க வேண்டுமென்றாலும் தூரத்திலிருந்து பார்க்கும்போது பேய் பிசாசுகள்தான் நடமாடுகின்றனவோ என்று எண்ணும்படியிருந்தது. பயங்கரத்தை அதிகமாக்குவதற்கு அந்த இடத்திலிருந்து

தாரை தப்பட்டைகளின் முழக்கம், உடுக்கு அடிக்கும் சப்தம்—இவையெல்லாம் கலந்து வந்து கொண்டிருந்தன.

விக்கிரமன் பொன்னன் இருவருக்குமே உள்ளுக்குள் திகிலாய்த் தானிருந்தது. ஆனாலும், அவர்கள் ஒன்றை வெளிக்குக் காட்டாமல் குள்ளனைப் பின்பற்றி ஏரிக்கரையோடு சென்றார்கள். குள்ளனுடைய நடை வேகம் இப்போது இன்னும் அதிகமாயிற்று. ஏரிக்கரையோடு சற்று தூரம் போய், ஜலம் வறண்டு போயிருந்த இடத்தில் இறங்கி, குறுக்கே ஏரியைக் கடந்து செல்லலானான். அவனைப் பின் தொடர்ந்து விக்கிரமனும் பொன்னனும் குதிரைகளைச் செலுத்தினார்கள்; குதிரைகளும் பீதி அடைந்திருந்தன என்பது அவற்றின் உடல் நடுக்கத்திலிருந்து தெரிய வந்தது.

இன்னொரு கால் நாழிகைக்கெல்லாம் அவர்கள் குன்றின் அடிவாரத்துக் காட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். அங்கே குதிரைகளின் நடுக்கம் அதிகமானபடியால் விக்கிரமனும் பொன்னனும் குதிரைகள் மீதிருந்து இறங்கி அவற்றை மரத்தில் கட்டினார்கள். பிறகு, காட்டுக்குள் பிரவேசித்தார்கள்.

தீவர்த்திகளின் வெளிச்சத்தில் ஆங்காங்கே ஜனங்கள் ஆவேசம் வந்தது போல் ஆடுவதையும், சிலர் மஞ்சள் வஸ்திரம் தரித்துக் கண் மூடி தியானத்தில் இருப்பதையும், சிலர் அடுப்பு மூட்டிப் பொங்கல் வைப்பதையும், இன்னும் சிலர் கத்திகளைப் பாறைகளில் தீட்டிக் கொண்டிருப்பதையும், சிலர் உடுக்கு அடிப்பதையும் பார்த்துக் கொண்டு போனார்கள். திடீரென்று மரங்கள் இல்லாத வெட்ட வெளி தென்பட்டது. அந்த வெட்ட வெளியின் வலது புறத்தில் ஒரு மொட்டைக் குன்று நின்றது. அதில் பயங்கரமான பெரிய காளியின் உருவம் செதுக்கப்பட்டு, அதன்மேல் பளபளப்பான வர்ணங்கள் பூசப்பட்டிருந்தன. காளியின் கண்கள் உருட்டி விழித்துப் பார்ப்பதுபோலவே தோற்றமளித்தன. அந்த உருவத்துக்குப் பக்கத்தில் சிலர் கும்பலாக நின்றார்கள். அவர்களுக்கு நடு மத்தியில் எல்லாரையும் விட உயர்ந்த ஆகிருதியுடனும், தலையில் செம்பட்டை மயிருடனும், கழுத்தில் கபால மாலையுடனும், நெற்றியில் செஞ்சந்தனமும் குங்குமமும் அப்பிக்கொண்டு, மகாகபால பைரவர் நின்றார். அவருக்குப் பின்னால் ஒருவன் நின்று உடுக்கு அடித்துக் கொண்டிருந்தான். கபால பைரவருடைய கண்கள் அப்போது மூடியிருந்தன. அவருடைய வாய் ஏதோ முணுமுணுத்துக்கொண்டிருந்தது. அவர் உடம்பு இலேசாக முன்னும் பின்னும் ஆடிக் கொண்டிருந்தது.

இப்போது அவர் உடம்பைப் போர்த்தியிருக்கவில்லை. ஒரு கை புஜத்துக்குக் கீழே வெட்டப்பட்டுத் துண்டமாய் நின்றதானது அவருடைய கோரமான தோற்றத்தை இன்னும் கோரமாக எடுத்துக் காட்டிற்று. மகா கபால பைரவர் நின்ற குன்றின் அடிவாரத்துக்கு எதிரே கொஞ்ச தூரத்தில் ஒரு சிறு பாறை இருந்தது. இயற்கையாகவே அது பலி பீடம்போல் அமைந்திருந்தது. அந்த பலி பீடத்தின் மேல் சிவனடியார் கையும் காலும் உடம்பும் கயிறுகளால் கட்டப்பட்டுக் கிடந்தார். அவருடைய கண்கள் நன்றாகத் திறந்திருந்தன. அங்குமிங்கும் மேலும் கீழும் அவருடைய கூரிய கண்கள் சுழன்று சுழன்று பார்த்துக் கொண்டிருந்தன.

பலி பீடத்துக்குப் பக்கத்தில் ஒரு ராட்சத உருவம் கையில் பிரம்மாண்டமான கத்தியுடன் ஆயத்தமாய் நின்றது. மகா கபால பைரவர் கண்ணைத் திறந்து பார்த்து, ஆக்ஞை இட வேண்டியதுதான். உடனே, சிவனடியாரின் கழுத்தில் கத்தி விழுந்து விடச் சித்தமாயிருந்தது!

மேலே விவரித்த காட்சியையெல்லாம் விக்கிரமன் ஒரு நொடிப் பொழுதில் பார்த்துக் கொண்டான். அந்த இடத்துக்கு வந்ததும் குள்ளன் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து மகா கபால பைரவர் பக்கம் போவதையும் பார்த்துக் கொண்டான். அவ்வளவுதான்; ஒரு கணங்கூட அவன் தாமதிக்கவில்லை. கையில் கத்தியை எடுத்து வீசிக்கொண்டு ஒரு பாய்ச்சலில் பலி பீடத்துக் கருகில் சென்றான். அந்த ராட்சத உருவத்தின் கையிலிருந்த கத்தியைத் தன் கத்தியினால் ஓங்கி

அடிக்கவும், அது தூரத்தில் போய் விழுந்தது. உடனே, சிவனடியாரின் பக்கத்தில் வந்து நின்று கொண்டான். அவனைப் பின் தொடர்ந்து ஓடி வந்திருந்த பொன்னனைப் பார்த்து, "பொன்னா! ஏன் நிற்கிறாய்? கட்டுகளை உடனே அவிழ்த்து விடு!" என்றான்.

இவ்வளவும் கண் மூடிக் கண் திறக்கும் நேரத்தில் நடந்து விட்டது. சுற்றிலும் நின்றவர்கள் எல்லாரும் "ஹா! ஹா!" என்று கூச்சலிட்டதைக் கபால பைரவர் கண் விழித்துப் பார்த்தார். உடனே நிலைமை இன்னதென்று தெரிந்து கொண்டார். நிதானமாக நடந்து பலி பீடத்துக்கு அருகில் வந்து விக்கிரமனை உற்றுப் பார்த்தார்.

"ஹா ஹா ஹா!" என்று அவர் நகைத்த ஒலி, குன்றுகளும் பாறைகளும் அடர்ந்த அந்த வனாந்திரப் பிரதேசமெல்லாம் பரவி எதிரொலி செய்தது.

அதைக் கேட்டவர்களுக்கெல்லாம் மயிர்க் கூச்சல் உண்டாயிற்று.

இதற்குள், என்னமோ விசேஷம் நடக்கிறது என்று அறிந்து நாலா பக்கத்திலிருந்தும் ஜனங்கள் ஓடி வந்து பலிபீடத்தைச் சூழ ஆரம்பித்தார்கள். அதைக் கண்ட மகா கபால பைரவர் தமது ஒற்றைக் கையைத் தூக்கி "ஹும்!" என்று ஒரு கர்ஜனை செய்தார். அவ்வளவுதான். எல்லோரும் சட்டென்று விலகிச் சென்று சற்று தூரத்திலேயே நின்றார்கள். கீழே விழுந்த கத்தியை எடுத்துவந்த ராட்சதனும் அந்த ஹுங்காரத்துக்குக் கட்டுப்பட்டுத் தூரத்தில் நின்றான். பொன்னனும் நின்ற இடத்திலேயே செயலிழந்து நின்றான்.

மகா கபால பைரவர் விக்கிரமனை மறுபடியும் உற்றுப் பார்த்தார். எங்கேயோ அதல பாதாளத்திலிருந்து வருவது போன்ற கனமான குரலில், "பிள்ளாய்! நீ பார்த்திப சோழனின் மகன் விக்கிரமன் அல்லவா? சரியான சமயத்தில் நீ வந்து சேர்வாய் என்று காளி மாதா அருளியது உண்மையாயிற்று. மாதாவின் மகிமையே மகிமை" என்றார்.

காந்த சக்தி பொருந்திய அவருடைய சிவந்த கண்களின் பார்வையிலிருந்து விலகிக் கொள்ள முடியாதவனாய் விக்கிரமன் பிரமித்து நின்றான்.

"பிள்ளாய்! உன்னைத் தேடிக் கொண்டு நான் மாமல்லபுரத்துக்கு வந்தேன். அதற்குள் அந்தப் பித்தன் மாரப்பன் தலையிட்டுக் காரியத்தைக் கெடுத்து விட்டான். ஆனாலும் இன்றிரவு உன்னை நான் இங்கு எதிர்பார்த்தேன்......"

மந்திரத்தினால் கட்டுண்ட நாக சர்ப்பத்தின் நிலைமையிலிருந்த விக்கிரமன், விம்முகிற குரலில், "நீர் யார்? எதற்காக என்னை எதிர் பார்த்தீர்?" என்றான்.

"எதற்காகவா? இன்றிரவு இந்த தக்ஷிண பாரத தேசத்தில் காளிமாதாவின் சாம்ராஜ்யம் ஸ்தாபிதமாகப் போகிறது. இந்த சாம்ராஜ்யத்திற்கு உனக்கு இளவரசுப் பட்டம் கட்ட வேண்டுமென்று மாதாவின் ஆக்ஞை!" என்றார் கபால பைரவர்.

அப்போது எங்கிருந்தோ 'கலுக்' என்ற பரிகாஸச் சிரிப்பின் ஒலி எழுந்தது. கபால பைரவரும், விக்கிரமனும் உள்பட அங்கிருந்தவர்கள் அனைவரும் அக்கம் பக்கம் திரும்பிப் பார்த்தார்கள். ஆனால், சிரித்தது யார் என்பதைக் கண்டு பிடிக்க யாதொரு வழியும் தென்படவில்லை.

விக்கிரமன் தன்னை அத்தனை நேரமும் கட்டியிருந்த மந்திர பாசமானது மேற்படி சிரிப்பின் ஒலியினால் அறுபட்டது என்பதை உணர்ந்தான். சிவனடியாரை ஒரு தடவை பார்த்து விட்டுத் திரும்பி, கபால பைரவரை நேருக்கு நேர் நோக்கினான்.

"நீர் சொல்வது ஒன்றும் எனக்கு விளங்கவில்லை. எனக்கு இளவரசுப் பட்டம் கட்டப் போவதாகச் சொல்கிறீர். அது உண்மையானால், முதலில் நான் செய்யப்போகும் காரியத்துக்குக் குறுக்கே நிற்க வேண்டாம். இதோ இந்தப் பலிபீடத்தில் கட்டுண்டு கிடக்கும் பெரியார் எங்கள் குலத்தின் நண்பர். எனக்கும் என் தாய்க்கும் எவ்வளவோ பரமோபகாரம் செய்திருக்கிறார். அவரை விடுதலை செய்வது என் கடமை. என் கையில் கத்தியும் என் உடம்பில் உயிரும் இருக்கும் வரையில் அவரைப் பலியிடுவதற்கு நான் விடமாட்டேன்" என்று சொல்லி

விக்கிரமன் பலிபீடத்தை அணுகி, சிவனடியாரின் கட்டுக்களை வெட்டி விட யத்தனித்தான்.

"நில்!" என்று ஒரு பெரிய கர்ஜனை செய்தார் கபாலபைரவர். அஞ்சா நெஞ்சங்கொண்ட விக்கிரமனைக்கூட அந்த கர்ஜனை சிறிது கலங்கச் செய்து விட்டது. அவன் துணுக்குற்று ஒரு கணம் ஸ்தம்பித்து நின்றான். சிவனடியாரின் கட்டுக்களை வெட்டுவதற்காக நீட்டிய கத்தி நீட்டியபடியே இருந்தது.

கபால பைரவர் மறுபடியும் உரத்த குரலில், "பிள்ளாய்! விக்கிரமா! இந்தப் போலிச் சிவனடியார்—இந்த வஞ்சக வேஷதாரி—இந்தப் பொய் ஜடா மகுடதாரி—யார் என்று அறிந்தால், இவ்விதம் சொல்ல மாட்டாய்! இவரைக் காப்பாற்றுவதற்கு இவ்வளவு துடியாக நிற்க மாட்டாய்" என்றார்.

அவருடைய குரலில் தொனித்த ஆத்திரமும், அழுத்தமும் விக்கிரமனைத் திகைப்படையச் செய்தது.

"வஞ்சகமா? வேஷமா? பின்னே, இவர் யார்?" என்றான்.

"இந்த வேஷதாரியையே, கேள், 'நீர் யார்?' என்று. தைரியமிருந்தால் சொல்லட்டும்!" என்றார் கபால பைரவர்.

விக்கிரமன் சிவனடியாரைப் பார்த்தான். அவருடைய முகத்தில் புன்னகை தவழ்வதைக் கண்டான். அதே சமயத்தில், "விக்கிரமா! கபால மாலையணிந்த இந்த வஞ்சக வேஷதாரி யார் என்று முதலில் கேள்; தைரியமிருந்தால் சொல்லட்டும்!" என்று இடி முழக்கம்போல் ஒரு குரல் கேட்டது. இவ்வாறு கேட்டுக் கொண்டு, பக்கத்திலிருந்த பாறையின் மறைவிலிருந்து ஓர் உருவம் வெளிப்பட்டது. அங்கிருந்தவர்கள் அத்தனை பேருடைய கண்களும் அந்த உருவத்தின் மேல் விழுந்தன. தீவர்த்தி வெளிச்சம் முகத்தில் விழுந்தபோது, "ஆ!" என்ற வியப் பொலி ஏக காலத்தில் அநேகருடைய வாயிலிருந்து எழுந்தது.

விபூதி ருத்திராட்ச மணிந்து, முகத்தில் ஞான ஒளி வீசத் தோன்றிய அப்பெரியாரைப் பார்த்ததும் விக்கிரமனுக்கு என்றுமில்லாத பயபக்தி உண்டாயிற்று.

வந்தவர், வேறு யாருமில்லை. பல்லவ சாம்ராஜ்யத்தின் பழைய சேனாதிபதியும், வாதாபி கொண்ட மகா வீரருமான பரஞ்சோதி என்னும் சிறுத்தொண்டர்தான்.

## முப்பத்தேழாம் அத்தியாயம்

## — நீலகேசி —

**பா**றை மறைவிலிருந்து சிறுத்தொண்டர் வெளிப்பட்ட சில விநாடிகளுக்கெல்லாம் இன்னும் சில அதிசயங்கள் அங்கே நிகழ்ந்தன. பாறைகளின் பின்னாலிருந்தும், மரங்களின் மறைவிலிருந்தும், இன்னும் இங்கிருந்துதான் வந்தார்கள் என்று சொல்ல முடியாதபடியும், இந்திர ஜாலத்தினால் நிகழ்வதுபோல், திடீர் திடீரென்று ஆயுதபாணிகளான போர் வீரர்கள் அங்கே தோன்றிக் கொண்டிருந்தார்கள். இதை விடப் பெரிய மகேந்திர ஜால வித்தை ஒன்றும் அங்கே நிகழ்ந்தது. பலிபீடத்தில் கட்டுண்டு கிடந்த சிவனடியார் எப்படியோ திடீரென்று அக்கட்டுக்களிலிருந்து விடுபட்டு எழுந்து பலிபீடத்திலிருந்து கீழே குதித்தார்.

இதற்கிடையில், சிறுத்தொண்டர் நேரே மகா கபால பைரவர் நின்ற இடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும், கபால பைரவரின் முகத்தில் காணப்பட்ட மாறுதல் நம்ப முடியாததாயிருந்தது. எத்தனையோ பேருடைய மனதில் பீதியையும் பயங்கரத்தையும் அளித்த அவருடைய கோரமான முகத்தில் அப்போது அளவிலாத பீதி காணப்பட்டது. சிறுத்தொண்டர் அருகில் நெருங்க, நெருங்க, அவருடைய பீதி அதிகமாயிற்று. அவருடைய உடம்பெல்லாம் நடுங்கிற்று. இன்னும் சிறுத்தொண்டர் அவருடைய சமீபத்தில் வந்து நேருக்கு நேராக முகத்தை ஏறிட்டுப் பார்த்து, "ஓ கபாலிக

வேஷதாரியே! மகா காளியின் சந்நிதியில் நீ யார் என்று உண்மையைச் சொல்!" என்று கேட்டபோது, கபால பைரவர் இரண்டடி பின்வாங்கி, பிறகு நடக்கவும் நிற்கவும் சக்தியற்றவராய்த் தள்ளாடித் தொப்பென்று கீழே விழுந்தார்.

அப்போது அங்கே சூழ்ந்திருந்த காளி உபாசகர்களிடையில் 'ஹாஹா' காரம் உண்டாயிற்று. வெறியில் மூழ்கிக் கிடந்த அந்தக் காபாலிகர்களால் என்ன விபரீதம் நேரிடுமோ என்று விக்கிரமன் கூடச் சிறிது துணுக்கமடைந்தான். "சிவனடியாருக்கு நேரவிருந்த அபாயந்தான் நீங்கி விட்டதே! பொன்னனை அழைத்துக் கொண்டு அங்கிருந்து போய்விடலாமா?" என்று ஒரு எண்ணம் தோன்றிற்று. ஆனாலும், இந்தக் கபால பைரவர் யார், சிறுத்தொண்டரைக் கண்டதும் ஏன் அவர் இவ்வளவு பீதியடைய வேண்டும் என்று அறிய அவனுடைய மனதில் அளவிலாத ஆவல் எழுந்தது. இந்த ஆவல் காரணமாக, அங்கிருந்து போய் விடலாம் என்ற எண்ணத்தை மாற்றிக்கொண்டு அங்கேயே நின்றான்.

பொன்னனோ, வியப்பு, பயபக்தி, அவமானம் முதலிய பலவித உணர்ச்சிகள் உள்ளத்தில் பொங்க, தன்னை மறந்து செயலற்று நின்றான். சிவனடியார் தன்னிடம் சிறுத்தொண்டருக்குச் செய்தி சொல்லியனுப்பியதும், தான் அதை நிறைவேற்றாததும் அவனுக்கு நினைவு வந்தபோது அவமான உணர்ச்சி உண்டாயிற்று. ஆனால், சிவனடியார் தன்னையே நம்பியிருந்து விடவில்லையென்பதையும், தன்னந்தனியாகவே அரும்பெரும் காரியங்களையெல்லாம் சாதித்திருக்கிறார் என்பதையும் நினைத்தபோது அவரிடம் அவனுக்கிருந்த பயபக்தி பன்மடங்கு பெருகிற்று. சிவனடியார் கட்டுப்பட்டதுபோல் கிடந்ததெல்லாம் ஏதோ ஒரு பெரிய நோக்கத்துடனேயே என்பதை அறிந்து அவன் விம்மிதமடைந்தான். மகா கபால பைரவர் என்று பெயர் தாங்கிய இந்தக் கோர மனிதன் யார் என்பதை அறிந்துகொள்ளும் ஆவலும் அவனுக்கு அளவிலாமல் பொங்கிற்று. "சிவனடியாருக்குத் தான் அபாயம் ஒன்றுமில்லையே? விக்கிரம மகாராஜாவுடன் திரும்பி மாமல்லபுரம் போகலாமே?" என்ற எண்ணமே அவனுக்கு உதயமாகவில்லை.

கபால பைரவர் கீழே விழுந்து, நாலாபுறமிருந்தும் காபாலிகர்கள் ஓடிவரத் தொடங்கிய சமயத்தில், சிறுத்தொண்டர் சட்டென்று பலிபீடத்தின் மீது ஏறிக் கொண்டார்.

"மகா ஜனங்களே! காளிமாதாவின் பக்தர்களே! நெருங்கி வாருங்கள். 'மகா கபால பைரவர்' என்ற பொய்ப் பெயருடன் உங்களையெல்லாம் இத்தனை காலமும் ஏமாற்றி வஞ்சித்து வந்த இந்த ஒற்றைக்கை மனிதனைப் பற்றிய உண்மையைச் சொல்கிறேன்" என்றார். உடனே எல்லாரும் பலிபீடத்தைச் சூழ்ந்துகொண்டு சிறுத்தொண்டரையே பார்த்தவண்ணமிருந்தார்கள்.

கபால பைரவர் மட்டும் பயப்பிராந்தியடைந்து கீழே விழாமல் அந்தக் காபாலிகர்களை ஆக்ஞையிட்டு ஏவியிருந்தால் அவர்கள் என்ன வேணுமானாலும் அச்சமயம் செய்திருப்பார்கள். சிறுத்தொண்டரைத் துண்டம் துண்டமாக வெட்டிப் போடவும் துணிந்திருப்பார்கள். ஆனால், திடீரென்று சிறுத்தொண்டரைப் பார்த்ததும் கபால பைரவர் பீதியடைந்து கீழே விழுந்ததானது அவர்களுடைய மனதில் அவநம்பிக்கையையும் குழப்பத்தையும் விளைவித்திருந்தது.

சிறுத்தொண்டர் கம்பீரமான குரலில், காடு மலையெல்லாம் எதிரொலி செய்யுமாறு பேசினார்:—

"கேளுங்கள். நாம் பிறந்த இந்தத் தமிழகமானது மகா புண்ணியம்செய்த நாடு. எத்தனையோ மகா புருஷர்கள் இந்நாட்டிலே தோன்றி மெய்க் கடவுளின் ஸ்வரூபத்தையும், அவரை அடையும் மார்க்கத்தையும் நமக்கு உபதேசித்திருக்கிறார்கள். திருமூல மகரிஷி,

'அன்பும் சிவமும் இரண்டென்பர்
அறிவிலார்'

என்று அருளியிருக்கிறார். வைஷ்ணவப் பெரியார்,

'அன்பே தகளியாய் ஆர்வமே
நெய்யாக
இன்புருகுசிந்தை யிடுதிரியா
—நன்புருகி
ஞானச்சுடர் விளக்கேற்றினேன்'

என்று திருவாய் மலர்ந்திருக்கிறார். நமது தமிழகத்தில் நம் முன்னோர்களில் பலர் அனுஷ்டித்து வந்த சமண, புத்த சமயக் கோட்பாடுகள் கொல்லா விரதத்தையும், ஜீவகாருண்யத்தையுமே அடிப்படையாகக் கொண்டிருந்தன. இத்தகைய மகோந்நதமான தர்மங்களுக்கு உறைவிடமாயுள்ள நமது நாட்டில், கபாலிகம், பைரவம் என்னும் கோட்பாடுகளையும், நரபலி, நர மாமிச பட்சணம் முதலிய பயங்கர வழக்கங்களையும் சிலர் சிறிது காலமாகப் பரப்பி வருகிறார்கள். ஒரு காலத்தில் நானே இந்தக் கோட்பாடுகளை நம்பியதுண்டு. அன்பே உருவமான சிவபெருமானும், கருணையே வடிவமான பரா சக்தியும் நரபலியை விரும்புகிறார்கள் என்று மடமையினால் நம்பினேன். சிவபெருமான் கையில் மண்டை ஓட்டை வைத்திருப்பதாகவும், பராசக்தி கபால மாலையைத் தரிப்பதாகவும் புராணங்களில் சொல்லியிருப்பதெல்லாம் தத்வார்த்தங் கொண்டவை என்பதை அறியாமல், என் சொந்தப் பிள்ளையையே காபாலிகர்களுக்குத் தத்தம் செய்தேன். அப்போது, இதோ இந்தப் பலி பீடத்தில் சற்று முன் கட்டுண்டு கிடந்த மகா புருஷர்தான் என் கண்ணைத் திறந்து விட்டார். உண்மையை எனக்குத் தெரியப்படுத்தினார்..."

அப்போது, ஒரு குரல், "அவர் யார்? உண்மையான சிவனடியாரா? வேஷதாரியா?" என்று கேட்டது.

"அவர் எங்கே? எங்கே?" என்று பல குரல்கள் கூவின.

**உ**ண்மை யென்னவெனில், சிறுத்தொண்டர் திடீரென்று தோன்றியவுடன் ஏற்பட்ட குழப்பத்தில் சிவனடியார் ஒருவரும் கவனியாதபடி அந்த இடத்தை விட்டே அகன்று விட்டார்.

அப்போது சிறுத்தொண்டர் சொல்வார் :—

"அந்த மகாபுருஷர் இந்த இடத்தை விட்டுச் சென்று விட்டார். அவர் யார் என்று வெளியிடுவதற்கு எனக்கு இன்றைக்கு அதிகாரம் இல்லை. இன்னும் இரண்டு நாளில் உறையூரில் நடக்கப் போகும் வைபவத்துக்கு நீங்கள் எல்லாரும் வந்தால், சிவனடியார் யார் என்பதை அறிவீர்கள். இப்போது இதோ இங்கே கீழே விழுந்து பயப் பிராந்தியினால் நடுங்கிக் கொண்டிருக்கும் கபால பைரவர் யார் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். புகழ் பெற்ற நமது மகேந்திர சக்கரவர்த்தியின் காலத்தில் — இருபது வருஷத்துக்கு முன்னால்—வாதாபி அரசன் புலிகேசி இந்தத் தமிழகத்தின் மேல் படையெடுத்து வந்தது உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா? ..." என்று சிறுத்தொண்டர் கேட்டு நிறுத்தியபோது, பல குரல்கள், "ஞாபகம் இருக்கிறது!" என்று கூவின.

"சரி; அப்போது அந்த ராட்சதப் புலிகேசியும் அவனுடைய படைகளும் நம்பிக்கைத் துரோகம் செய்து, இந்நாட்டின் பட்டணங்களிலும் கிராமங்களிலும் செய்து விட்டுப்போன அட்டூழியங்களையெல்லாம் நீங்கள் மறந்திருக்க முடியாது. மகேந்திர சக்கரவர்த்தி காலமான பிற்பாடு தர்ம ராஜாதிராஜ நரசிம்ம பல்லவரும், நானும் பெரும் படை திரட்டிக்கொண்டு புலிகேசியைப் பழி வாங்குவதற்காக வாதாபிக்குப் படையெடுத்துச் சென்றதையும் நீங்கள் அறிவீர்கள். வாதாபி நகரத்தின் முன்னால் நடந்த கொடும் யுத்தத்தில், நமது வீரத் தமிழ்ப் படைகள் புலிகேசியின் படைகளையெல்லாம் 'ஹதா ஹதம் செய்தன. யுத்தகளத்துக்கு வந்த புலிகேசியின் படைகளில் ஒருவராவது திரும்பிப் போகவிடக் கூடாது என்று சக்கரவர்த்தி கட்டளையிட்டிருந்தார். ஆனால், அவருடைய கட்டளைக்கு மாறாக ஒரே ஒருவனைத் திரும்பிப் போகும்படி நான் விட்டேன். போரில் ஒரு கையை இழந்து, 'சரணாகதி' என்று என் காலில் விழுந்தவனைக் கொல்ல மனமில்லாமல் நான் ஓடிப் போக அனுமதித்தேன். அந்த ஒற்றைக் கை மனிதன் தான் இதோ விழுந்து கிடக்கும் நீலகேசி; புலிகேசியைவிடக் கொடிய அவனுடைய சகோதரன் இவன்."

இதைக் கேட்டதும் அந்தக் கூட்டத்தில், "ஆஹா!" "அப்படியா?" "என்ன மோசம்!" "என்ன வஞ்சகம்!" என்ற பலவிதமான பேச்சுக்கள் கலகலவென்று எழுந்தன. சிறிது பேச்சு அடங்கிய பிறகு சிறுத்தொண்டர் மீண்டும் கூறுவார் :—

"இவனை நான் மன்னித்து உயிரோடு திருப்பி அனுப்பினேன் என்று தெரிவித்தபோது சக்கரவர்த்தி, 'நீ பிசகு செய்தாய்; இதனால் ஏதாவது விபரீதம் விளையும்' என்று சொன்னார். அது உண்மையாகி விட்டது. இந்த நீலகேசி, காபாலிகன் வேஷத்தில் நமது புண்ணியத் தமிழகத்தில் வந்து இருந்து கொண்டு, இந் நாட்டில் பஞ்சம் ஏற்பட்டு ஜனங்களுடைய புத்தி கலங்கியிருந்த காலத்தில் கபாலிகத்தையும் நரபலியையும் பரப்பி வந்திருக்கிறான். எதற்காக? வீரத்தினால் ஜயிக்க முடியாத காரியத்தை, சூழ்ச்சியினால் ஜயிக்கலாம் என்றுதான். கடல் களுக்கப்பாலுள்ள தேசங்களி லெல்லாம் புகழ் பரவி யிருக்கும் நமது மாமல்ல சக்கரவர்த்திக்கு விரோதமாக உங்களையெல்லாம் ஏவிவிட்டு சதி செய்விக்கலாம் என்றுதான். இந்த உத்தேசத்துடனேதான் கொல்லி மலையின் உச்சியிலுள்ள குகைகளில் ஆயிரக் கணக்கான கத்திகளையும் கோடரிகளையும் இவன் சேர்த்து வைத்திருந்தான்......"

"ஆ!" என்று கபால பைரவரின் கோபக் குரல் கேட்டது.

"ஆம்; அந்த ஆயுதங்களை யெல்லாம் சக்கரவர்த்தியின் ஆக்ஞையினால் இன்று அப்புறப்படுத்தி விட்டோம். இன்னும் இந்தச் சோழநாட்டு இளவரசன் விக்கிரமனையும் தன்னுடைய துர்நோக்கத்திற்கு உபயோகப்படுத்திக் கொள்ள எண்ணியிருந்தான். அதற்காகவே பார்த்திப சோழ மகாராஜாவின் வீர பத்தினி அருள்மொழி தேவியைச் சிறைப்படுத்தி வைத்திருந்தான்......"

அப்போது மகா கபால பைரவர் தரையிலிருந்து சட்டென்று எழுந்து நின்று, "எல்லாம் பொய்; கட்டுக் கதை; இதற்கெல்லாம் சாட்சி எங்கே?" என்று கேட்டார். அப்போது ஒருவாறு அவருடைய பீதி தெளிந்திருந்ததாகக் காணப்பட்டது.

கபால பைரவர் "சாட்சி எங்கே?" என்று கேட்டதும், "இதோ நான் இருக்கிறேன் சாட்சி!" என்றது ஒரு குரல். திடீரென்று ஒரு வெள்வேல மரத்தின் மறைவி லிருந்து மாரப்ப பூபதி தோன்றினான்.

"ஆம்; நான் சாட்சி சொல்கிறேன். இந்தக் கபால பைரவர் என்னும் நீலகேசி உண்மையில் காபாலிகன் அல்ல; வேஷதாரி. இவன் மகா ராஜாதிராஜ நரசிம்ம பல்லவ சக்கரவர்த்திக்கு எதிராகச் சதி செய்தான். அந்தச் சதியில் என்னையும் சேரும்படி சொன்னான். நான் மறுத்து விட்டேன். அதன்மேல், இந்த தேசப் பிரஷ்ட இளவரசனைத் தன்னுடன் சேர்த்துக்கொள்ள விரும்பினான். சக்கரவர்த்தியின் ஆக்ஞைப்படி காஞ்சிக்கு நான் அனுப்பிய இந்த இளவரசனை இவன் வழியில் மறித்து இங்கே கொண்டு வர ஏற்பாடு செய்தான்..."

அப்போது சிறுத்தொண்டர் "போதும், மாரப்பா! உன் சாட்சியம் போதும்!" என்றார்.

மாரப்பன் மனதிற்குள் என்ன உத்தேசித்தானோ தெரியாது. தன்னைப் புறக்கணித்து விட்டு மகா கபால பைரவர் விக்கிரமனுக்கு யுவராஜா பட்டம் கட்டுவதாகச் சொன்னதைக் கேட்டு அவனுக்கு ஆத்திரம் உண்டாகி யிருக்கலாம். அல்லது சக்கரவர்த்திக்கு விரோதமாகச் சதி செய்த குற்றம் தன் பேரில் ஏற்படாம லிருக்க வேண்டுமென்று எண்ணியிருக்கலாம்.

அவன் உத்தேசம் எதுவாயிருந்தாலும், அப்போது யாரும் எதிர் பாராத ஒரு காரியத்தை அவன் செய்தான். கையில் உருவிய கத்தியுடன் மகா கபால பைரவர் நின்ற இடத்தை அணுகினான். "சக்கரவர்த்திக்கு விரோதமாகச் சதி செய்த இந்த சாம்ராஜ்ய துரோகி இன்று காளிமாதாவுக்குப் பலியாகட்டும்!" என்று கூறிய வண்ணம், யாரும் தடுப்பதற்கு முன்னால், கத்தியை ஓங்கி வீசினான். அவ்வளவுதான்; கபால பைரவரின் தலை வேறாகவும் உடல் வேறாகவும் கீழே விழுந்தன.

எல்லாரும் பிரமித்துத் திகைத்து நிற்கும்போதே மாரப்பபூபதி பலி பீடத்தண்டை வந்து சிறுத்தொண்டருக்கு முன்னால் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து "பிரபோ! ஆத்திரத்தினால் செய்து விட்டேன். நான் செய்தது குற்றமானால் மன்னிக்க வேண்டும்" என்றான்.

அச்சமயம் யாரும் எதிர்பாராத இன்னொரு காரியம் நிகழ்ந்தது. கையில் கத்தியுடன் சித்திரகுப்தன் எங்கிருந்தோ வந்து பலிபீடத்தருகில் குதித்தான். படுத்திருந்த மாரப்பனுடைய கழுத்தில் அவன் வீசிய கத்தி விழுந்தது! அக்குள்ளனை உடனே சில பல்லவ வீரர்கள் பிடித்துக் கொண்டார்கள். குள்ளனோ 'ஹீ ஹீ ஹீ' என்று சிரித்தான்.

சில நிமிஷ நேரத்தில் நடந்து விட்ட இக் கோர சம்பவங்களைப் பார்த்த விக்கிரமன் மிகவும் அருவருப்பை அடைந்தான். யுத்த களத்தில் நேருக்கு நேர் நின்று போரிட்டு ஒருவரையொருவர் கொல்லுவது அவனுக்குச் சாதாரண சம்பவமானாலும், இம்மாதிரி எதிர்பாராத கொலைகள் அவனை பயங்கரப்படுத்தின. உடனே, அருகில் நின்ற பொன்னனைப் பார்த்து, "பொன்னா! நாம் போகலாம் வா!" என்றான். அப்பொழுது தான் தன்னையும் பொன்னனையும் சூழ்ந்து நின்ற பல்லவ வீரர்களை அவன் கவனிக்க நேர்ந்தது.

அந்த வீரர்களின் தலைவன் தன் கையிலிருந்த ஓலையை விக்கிரமனிடம் காட்டினான். அதில் சக்கரவர்த்தியின் முத்திரை பதித்த கட்டளை காணப்பட்டது. உறையூரிலிருந்து காஞ்சிக்கு வந்து கொண்டிருக்கும் சோழ இளவரசன் விக்கிரமனை வழியில் திருப்பி உறையூருக்கே மீண்டும் கொண்டு போகும்படிக்கும், விசாரணை உறையூரிலேயே நடைபெறுமென்றும் அவ்வோலையில் கண்டிருந்தது.

விக்கிரமன் அந்த ஓலையைப் பார்த்து விட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தான். அவனுடைய கை உடைவாளின் மேல் சென்றது. அப்போது பொன்னன், "மகாராஜா! பதற வேண்டாம்" என்றான்.

இதை யெல்லாம் கவனித்த சிறுத்தொண்டர், பல்லவ வீரர் தலைவனைப் பார்த்து, "அது என்ன ஓலை?" என்று கேட்டார். வீரர் தலைவன் அவரிடம் கொண்டுபோய் ஓலையைக் கொடுத்தான். சிறுத்தொண்டர் அதைப் படித்துப் பார்த்து விட்டு, "விக்கிரமா! நீ இந்தக் கட்டளையில் கண்டபடி உறையூருக்குப் போ! நானும் உன் தாயாரை அழைத்துக்கொண்டு உறையூருக்குத்தான் வரப் போகிறேன். இன்று நீ புரிந்த மகத்தான வீரச்செயலைச் சக்கரவர்த்தி அறியும்போது, அவருடைய மனம் மாறாமல் போகாது. அவசரப்பட்டு ஒன்றும் செய்ய வேண்டாம்!" என்றார்.

அடுத்த நிமிஷம் விக்கிரமனும் பொன்னனும் பல்லவ வீரர்கள் புடைசூழ, கோர சம்பவங்கள் நடந்த அந்த மயான பூமியிலிருந்து கிளம்பிச் சென்றார்கள்.

அப்புறம் சிறிது நேரம் அங்கே கூடியிருந்தவர்களுக்கெல்லாம் மெய்க் கடவுளின் ஸ்வரூபத்தையும், நர பலியின் கொடுமையையும் பற்றி சிறுத்தொண்டர் விரித்துரைத்தார். அதன் பயனாக, அன்று பலியாக இருந்தவர்களும், பலி கொடுக்க வந்தவர்களும் மனம் மாறி, தங்களைத் தடுத்தாட் கொண்ட மகான் சிறுத்தொண்டரைப் புகழ்ந்து கொண்டே தத்தம் ஊர்களுக்குச் சென்றார்கள். பலி பீடத்தில் கட்டுண்டு கிடந்த சிவனடியார் யாராயிருக்கலாமென்று அவர்கள் பலவாறு ஊகித்துப் பேசிக்கொண்டே போனார்கள்.

An R.I.N. ship in north Atlantic waters

# என்ன? ஆர்க்டிக் சமுத்திரத்தில் இந்தியாவின் தற்காப்பா?

ஆம், அதற்கென்ன. ராயல் இந்திய நேவி யுத்தக்கப்பல்கள் சில சமயங்களில் அவ்வளவு தொலையில் போய் நடவடிக்கை எடுத்து வருகின்றன. இதுவே தற்கால யுத்த உபாயம். தினசரி இந்த யுத்தக் கப்பல்கள் எவ்வளவோ ஆபத்துகளையும், சங்கடங்களையும் சமாளித்து கடற் பாதைகளைக் காவல்புரிந்து வருவதினால்தான் அத்தியாவசியமான யுத்த தளவாடங்கள் நமக்குக் கிடைத்து வருகின்றன. ஆகவே மேலும் அதிக சங்கடங்களை அவைகளுக்கு விளைவிக்கலாமா? கடற் படைக்கு எவ்வளவு சாயம் கிடைத்தாலும் தேவலை என்பதை நன்கறிந்திருந்தும் நமது வீடுகளில் பூசுவதற்காக சாயத்தை வாங்குவதினால் அதற்கு அதிக சங்கடத்தையே விளைவிக்கிறோம். சாயம், பெட்ரோல், உருக்கு, ரப்பர், கயிறு முதலிய நூற்றுக்கணக்கான சாமான்களும் அவைகளுக்காக நாம் செலவிடும் பணமும் தற்காப்புக்கு **ஜீவாதாரமானவை.** ஆகவே இவைகளைக் குறைவாக வாங்கி வெற்றியை துரிதப் படுத்துவோமாக.

# வெஜிடபில் கதம்ப ஊறுகாய்

★




வெள்ளரிக்காய், இஞ்சி, பாவக்காய், கீரைத்தண்டு, வாழைத்தண்டு கத்தரிக்காய், பச்சை மிளகாய், பச்சை மிளகு - சொல்லும்போதே வாயில் ஜலம் ஊறுகிறது - முதலியவை சேர்த்து கைபடாமல் ஜிஞ்ஜாமிருதமாகத் தயாரிக்கப்பட்டது. வாய்க்கு வெகு ஜோர். உடம்பிற்கு பரம சுகம். இன்றே உங்கள் தேவைக்கு எழுதவும். இரு ஸைஸ்களில் கிடைக்கும்.

★

# டி. எஸ். ஆர். அண்டு கோ.,

## வாஸனை திரவிய வியாபாரிகள்,

கும்பகோணம்.

மதராஸ் சோல் ஏஜெண்டுகள் :

**மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்**

பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

ஸ்டாக்கிஸ்டுகள் :

**சுவாமினாதய்யர் அண்டு சன்ஸ்.,**

புதுக்கோட்டை

**சாரதா ஸ்டோர்ஸ்**

காரைக்குடி

**மெஸர்ஸ். சண்டிகா அண்டு கோ.,**

முதல் அக்ரஹாரம், சேலம்

# கர்வபங்கம்

ஆசிரியர்: சரத் சந்திர சட்டர்ஜி] [மொழிபெயர்ப்பு: ஆர். ஷண்முகசுந்தரம்

## அத்தியாயம் 6.

"டாக்டர் சாஹிப், ஐந்து ஆறு புட்டி மருந்து சாப்பிட்டும் மார்பு வலி இன்னும் தீரவில்லையே?" என்று கேட்டாள் இந்து.

"தீர வில்லையா? அவர் ஒன்றும் சொல்ல வில்லையே?" என்றார் டாக்டர்.

"அவர் ஸ்வபாவமே இதுதான் என்பது உங்களுக்குத் தெரியுமே? அவருக்கு உடம்பு குணமாகவில்லை என்று நிச்சயமாகத் தோன்றுகிறது. அதோடு உடம்பும் தேறவே இல்லையே!"

டாக்டர் யோசித்துப் பார்த்து விட்டு, "பாருங்கள், எனக்குக் கூட சந்தேகமாக இருக்கிறது. வெறும் மருந்தினால் மட்டும் ஒன்றும் தீராது. ஒரு தரம் அவசியம் இடம் மாற்ற வேண்டும்" என்றார்.

"இதை நீங்கள் அவரிடத்தில் ஏன் சொல்லவில்லை?"

"ஒரு நாள் சொன்னேன். ஆனால் அவர் இதன் அவசியத்தை உணரவில்லை."

"அவர் உணராவிட்டால் என்ன ஆவது? நீங்கள் டாக்டர். நீங்கள் சொல்கிறபடி நடந்துதானே ஆக வேண்டும்?"

வயோதிக டாக்டர் சற்றுச் சிரித்தார்.

இந்து நாணத்துடன், "பாருங்கள், எனக்கு ஒரே துக்கமாக இருக்கிறது. நீங்கள் அவருக்கு ரொம்பவும் பயங்காட்ட வேண்டும்" என்றாள்.

டாக்டர் மெதுவாகத் தலையை அசைத்துக்கொண்டு, "இந்த வியாதிகளி லெல்லாம் பயம் இருக்கத்தான் இருக்கிறது!" என்றார்.

இந்துவின் முகம் களை கெட்டு விட்டது. "நிஜமாகவே பயம் இருக்கிறதா?" என்று கேட்டாள்.

அவளுடைய முகத்தைப் பார்த்து விட்டு டாக்டரால் உடனே ஒரு வார்த்தையும் சொல்ல முடியவில்லை. இந்துவின் கண்களில் நீர்வழிந்தது. "நான் உங்கள் குழந்தை மாதிரி, டாக்டர் சாஹிப். என்னிடத்தில் ஒன்றையும் ஒளிக்காதீர்கள். உள்ள விஷயத்தை அப்படியே என்னிடம் சொல்லுங்கள்" என்றாள்.

உண்மையிலேயே அதைப்பற்றி டாக்டருக்கும் ஒன்றும் தெரியாது! அவர் பலவிதமாக எவ்வளவோ உணர்த்தியும், இந்துவின் பயம் எள்ளத்தனையும் குறையவில்லை. அவள் தன் அறைக்குள் சென்று அழத் தொடங்கினாள்.

சாயங்காலம் நரேந்திரன் கையிலிருந்த பேனாவைக் கீழே வைத்துவிட்டு, திறந்திருந்த ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக் கொண்டிருந்தான். இந்து அறைக்குள் நுழைந்து, அருகே ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டு உட்கார்ந்தாள்.

நரேந்திரன் ஒருதரம் முகத்தைத் திரும்பிப் பார்த்து விட்டு மறுபடியும் பார்த்த பக்கமே பார்த்துக் கொண்டிருந்தான். கொஞ்ச காலமாகவே இந்துமதி பணம் கேட்பதில்லை. இன்று அவள் என்ன உத்தேசத்தோடு வந்து உட்கார்ந்திருக்கிறாள் என்பதை நினைக்கவே நரேந்திரனுடைய மனம் நடுங்குகிறது!

இந்து பணம் கேட்கவில்லை! "டாக்டர் சொல்கிறார். மருந்து குணப்படுத்தாத போது அவசியம் இடம் மாற்றித்தான் தீர வேணுமாம். ஒருதரம் போய் வந்தால் என்ன?"

நரேந்திரன் வாஸ்தவத்திலேயே திடுக்கிட்டுப் போனான். இவ்வளவு நாளாக மறைந்திருந்த 'அன்புக் குரல்' இன்று அவனைக் கூப்பிடுவது போலிருந்தது. இந்துமதியின் இந்தக் 'குரலை' அவன் மறந்தே போயிருந்தான். ஆகையால் அவன் பிரமை பிடித்தவன்போல் அவளையே பார்த்துக்கொண்டு, தனக்குள் என்னவெல்லாமோ யோசித்துக் கொண்டிருந்தான்.

"என்ன சொல்கிறீர்கள்? நானேக்கே எல்லாம் தயார் செய்து கொண்டு புறப்படுவதா? வெகு தூரம் போகவேண்டியதில்லை. இங்கேயே பைஜனாத்துக்குப்

பக்கத்தில் நாம் இருவரும், கமலா, வேலைக்காரி — இவர்களுடன் மட்டும் போகலாம். ராமன் ரொம்ப நம்பிக்கை உள்ள மனிதன். அவன் வீட்டிலேயே இருக்கட்டும். அங்கு ஒரு சின்ன வீடு வாடகைக்கு எடுத்துக் கொண்டாலே போதும். இன்றைக்கே சாமான்களைத் தயார் செய்ய ஆரம்பிக்கலாம் அல்லவா?"

பண விஷயத்தைப் பற்றித்தான் ஒரு மாதிரியாக அவனுக்குப் பயம் இருந்தது. இதைக் கேட்கவும் அவனுடைய பயம் சரியல்ல என்பது தெரிந்தது. "இந்த டாக்டரை இங்கே யார் அழைத்து வந்தது?" என்றான்.

இந்து பதிலளிப்பதற்கு முன் மறுபடியும் அவன், "என்னிடம் டாக்டரை அனுப்பித் தொந்தரவு செய்ய வேண்டாமென்று விமலாவிடம் சொல்லு. நான் நன்றாகத்தான் இருக்கிறேன்" என்றான்.

விமலா தான் ஒளிவு மறைவாக டாக்டரை அனுப்பி யிருக்கிறாளா? எல்லாம் விமலாதான்! இந்துவின் இதயத்தில் சுருக்கெனத் தைத்தது. இருந்தாலும் வெளிக்கு ஒன்றையும் காட்டாமல், "உண்மையில் உங்களுக்கு உடம்பு சரியில்லை. வலி இன்னும் தீர்ந்த பாடில்லை" என்றாள்.

"குணமாகி விட்டது" என்றான் நரேந்திரன்.

"இன்னும் உடம்பு தேறவில்லையே. பார்த்தாலே தெரிகிறது. ஒரு தரம் வெளியே சென்று வருவதால் ஒன்றும் கெட்டுப் போய் விடாது!"

நரேந்திரன் பொறுமையை இழந்து விட்டான். ஆனாலும் தன்னை அடக்கிக் கொண்டு, "இடம் மாற்றுவதற்கு எனக்குச் சாமர்த்தியம் போதாது" என்றான்.

இந்து பிடிவாதத்துடன், "அது முடியாது. உயிர் பிழைத்துத்தானே ஆக வேண்டும்?" என்றாள்.

இந்துவின் பிடிவாதம் நரேந்திரனுக்குப் புதிதா யிருந்தது. தனக்குத் தொந்தரவு கொடுக்க இது ஒரு புது வழி என்றே அவன் நினைத்தான். அவனுக்கு ரொம்பவும் கோபம் வந்தது. "உயிர் பிழைத்தே ஆகவேண்டும் என்று யார் சொல்வது? அப்படி ஒன்றும் அவசியமில்லை. அவசியம் இல்லையென்று ஆயிரம் தடவை சொல்கிறேன். உன் காலைப் பிடிக்கிறேன், இந்து! என்னைச் சும்மாவிட்டு விடு. நான் சாந்தமாக இறக்கிறேன்" என்றான்.

கணவனுடைய வாயிலிருந்து இப்படிக் கடுமையான வாசகம் வருமெனக் கனவிலேகூட இந்து கருதவில்லை. கற்சிலை போல் ஸ்தம்பித்து விட்டாள். ஆனால் நரேந்திரனுக்கு இது தெரியாது. "நான் தினசரி எவ்வளவு கஷ்டத்துடன் குடும்பத்தை நடத்துகிறேன் என்பது உனக்குத் தெரியும். எல்லாம்



"இது தங்கம் அல்ல, விமலா! பித்தளைதான்."

தெரிந்தே எனக்குக் கஷ்டம் விளைவிக்க வேண்டுமென்றுதான், இப்படி யெல்லாம் பேசுகிறாய்! நான் உனக்கு என்ன கெடுதல் பண்ணி விட்டேன்? நீ விரும்புவதுதான் என்ன?'' என்றான்.

இந்து பயத்துடன் கணவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். ஒரு வார்த்தையும் அவனிடமிருந்து வரவில்லை.

கூச்சல் போடுவதோ அல்லது கோபமடைவதோ தனக்கு எவ்வளவு ஒவ்வாத விஷயம் என்பதை நரேந்திரன் இப்போதுதான் உணர்ந்தான். அவன் குரலைச் சற்றுத் தணித்துக்கொண்டு, ''சரி, நான் அவசியம் இடம் மாற்ற வேண்டும் என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் நான் எப்படிப் போவேன்? பணம் எங்கிருந்து வரும்? குடும்பச் செலவைச் சரிக்கட்டுவதற்குள்ளே பிராணன் போய் விடும் போல் இருக்கிறதே?'' என்றான்.

இந்துமதி மிகுந்த துணிச்சலுடையவள். ஆனால் இன்று அவள் கலங்கிப் போய்விட்டாள். மிகவும் பணிவான குரலில், ''பணம் இல்லாவிட்டால் போகிறது; விலை உயர்ந்த நகைகள் என்னிடம் இருக்கின்றன ...'' என்றாள்.

''இருக்கின்றன. ஆனால் அவைகள் என்னுடையதல்லவே? அவைகளை உன் அப்பா உனக்குக் கொடுத்திருக்கிறார். எனக்கு அதில் துளிக்கூட அதிகாரம் கிடையாது. இவைகளெல்லாம் என்னை விட உனக்கு நன்றாகத் தெரியும்.''

''சரி, அது போகிறது. நான் ரொக்கமாக ரூபாய் தருகிறேன்.''

''ரூபாய் ஏது? குடும்பச் செலவி லிருந்து மிச்சம் பிடித்ததா?''

''ஆம்.''

அது மோதிரம் விற்ற பணம்! இந்து சுலபத்தில் பொய் பேச மாட்டாள்! ஆனால் அன்றைக்குப் பொய் பேசுவதென்றே கங்கணம் கட்டிக் கொண்டாள். நரேந்திரனுடைய முகம் மிகக் கடுமையாயிருந்தது. அவன் மெதுவாக, ''பணத்தை நீயே வைத்துக்கொள். வேண்டுமானால் ஏதாவது நகையும் செய்து கொள். நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டுச் சம்பாதித்த பணம் அது. அந்தப்பணத்தை அனாவசியமாக வீணாக்க விடமாட்டேன். இந்து, நான் உன்னிடம் எப்போதும் கடுமையாகப் பேசியதில்லை. எப்போதும் சாந்தமாகவே நடந்திருக்கிறேன். ஆனால் அன்று நீ, 'நான் எப்பொழுதும் பொய் சொல்லமாட்டேன்' என்று கர்வத்துடன் சொல்லவில்லையா? ...'' என்றான்.

கமலா அதற்குள் ஓடி வந்து, ''அம்மா! அத்தை வந்திருக்கிறாள்'' என்றாள்.

''என்ன செய்து கொண்டிருக்கிறாய், மன்னி?'' என்று சொல்லிக்கொண்டே விமலாவும் அருகில் வந்து நின்றாள்.

இந்து பெண்ணின் கழுத்திலுள்ள சங்கிலியைப் பிடுங்கிக் கணவன் எதிரில் விசிறி எறிந்து விட்டு, ''எனக்குப் பொய் பேசத் தெரியாமல்தான் இருந்தது. இதை உங்களிடமிருந்து தான் கற்றுக் கொண்டேன். இருந்தாலும் பித்தளையைப் பொன் என்று கூறும் வித்தையை இன்னும் உங்களிடமிருந்து நான் கற்றுக் கொள்ளவில்லை! பெண்ணையும் மனைவியையும் ஏமாற்றுகிறவர் என்னதான் செய்யமாட்டார்? மற்றவர்களை, அவர் பொய்யர் என்று குற்றம் சாட்டுவது வேடிக்கையாகவே இருக்கிறது!'' என்றாள்.

நரேந்திரன் சங்கிலியைக் கையில் எடுத்துக்கொண்டு, ''இது பித்தளை என்று உனக்கு எப்படித் தெரியும்? சோதித்துப் பார்த்தாயா?'' என்றான்.

''உங்கள் தங்கையிடம் கொடுத்தே சோதித்துப் பார்க்கச் சொல்லுங்கள்'' என்று கூறி விட்டு, கண்கள் சிவக்க விமலாவைப் பார்த்தாள் இந்துமதி.

''அண்ணா கொடுத்ததை ஆசாரியைக் கூப்பிட்டுப் பரிசோதித்துப் பார்ப்பதென்பது என்னால் முடியாத காரியம், அம்மா!'' என்று சொல்லிக்கொண்டே விமலா இரண்டடி பின்னால் சென்றாள்.

''இந்து, இதற்கு முன் இரண்டொரு வைரம் உனக்குக் கொடுத்தேனே? அதையும் சோதித்துப் பார்த்தாயா?'' என்று கேட்டான் நரேந்திரன்.

''பார்க்கவில்லை. ஆனால் இப்போது பார்த்தாக வேண்டும்.''

''பார்ப்பதற்கு இவை பித்தளையைப் போல் இல்லை'' என்று சொல்லியபடி தன் தங்கையின் புறம் சங்கிலியைக் காட்டிக்கொண்டு, ''இது தங்கம் அல்ல, விமலா! பித்தளைதான். என் குழந்தையின் பிறந்த தினக் கொண்டாட்டத்தின் போது எத்தனை துக்கத்தோடு ஏமாற்றினேன் தெரியுமா? ஆனாலும் பெண்ணைத் தான் ஏமாற்றினேன். மனைவியை ஏமாற்றத் துணியவில்லை!'' என்றான் நரேந்திரன்

(தொடரும்)

# ஒண்ணும் நம்பர் வீடு

" தமிலன் "

" இந்த இரண்டு கதவுகளையும் பார்த்தேளா? இதற்கு மரம் ஸ்பெஷலாகக் குடகிலிருந்து தருவித்தேன்" என்று விசுவநாதய்யர் தம் வீட்டு மாடி ஹாலின் கதவுகளை நண்பர் அருணாசலத்துக்குக் காண்பித்துக் கொண்டிருந்தார்.

"பேஷாயிருக்கு, முதல்தரமாயிருக்கு, அபூர்வமாயிருக்கு" என்று அருணாசலம் அடுக்கிக்கொண்டே போனார். மூன்று மணி சாவகாசமாக விசுவநாதய்யர் தம் வீட்டைப் பற்றிப் பெருமையடித்துக் கொள்வதைக் கேட்டுக் கேட்டு அவருக்குக் காது புளித்துப் போயிருந்தது. ஏதாவது புகழ்ந்து சொல்லித் தொலைக்கவேண்டுமே யென்பதற்காக அவர் அகராதியில் உள்ள புகழ் வார்த்தைகளை யெல்லாம் சொல்லி வந்தார்.

" இந்தப் பீரோவைப் பாருங்கள். இதற்கு மரம் எங்கிருந்து வந்தது தெரியுமா?" என்று விசுவநாதய்யர் கேட்டார். "சிங்கப்பூரிலிருந்து அல்லது தென் அமெரிக்காவிலிருந்து வந்திருக்கும்" என்றார் அருணாசலம்.

" இல்லை, ஹிமயமலையிலிருந்து. அங்கே இது ஓர் அருவியின் பக்கத்தில் இரண்டாயிரம் வருஷமா யிருந்ததாம்" என்று சொல்லிவிட்டுச் சட்டைப் பையிலிருந்து ஒரு பட்டுக் கைக்குட்டையை யெடுத்து அதைத் துடைத்தார். பிறகு " இந்த ஹால் மாதிரி நீங்கள் எங்கேயும் பார்த்திருக்கமாட்டீர்கள் " என்றார். " மிகவும் லக்ஷணமாயிருக்கிறது, சௌந்தர்யமாயிருக்கிறது, பிரம்மானந்தமா யிருக்கிறது. ரொம்பவும் திவ்யமா..." என்று கூட அருணாசலம் சொல்ல ஆரம்பித்துவிட்டார். அப்பொழுது விசுவநாதய்யர் குறுக்கிட்டு " இந்த ஹாலின் நீளம் அகலமே ஓர் அலாதிக் கணக்கு. எத்தனை அடி நீளம், எத்தனை அடி அகலம் இருக்கிறதென்று அளந்து பாருங்கள். அப்புறம் அதன் இரகசியத்தைச் சொல்லுகிறேன் " என்றார். "கடவுளே! என்னை இப்படி அகப்பட்டுக் கொள்ளும்படி செய்து விட்டாயே" என்று அருணாசலம் மனதுக்குள் தெய்வத்தை நொந்து கொண்டு அடி மேல் அடி வைத்து அளக்க ஆரம்பித்தார். கடவுளுக்கு இரக்கம் தோன்றிற்றோ என்னமோ தெரியவில்லை. அந்த சமயத்தில் "ஸார், தபால்!" என்று தபால்காரன் கூப்பிட்டுக் கொண்டே மேலே வந்து விசுவநாதய்யரிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தான்.

கடிதத்தைப் படித்த விசுவநாதய்யரின் முகம் திகிலடைந்தது. அவர் கைகால்கள் பதறின. " இதைப் படித்துப் பாரும் " என்று சொல்லி விட்டுப் பீரோவைப் பிடித்துக் கொள்ளப் போனார். "ஸார், ஸார்! ஹிமயமலைப் பீரோவை வெறுங் கையால் தொடுகிறீர்களே!" என்று அருணாசலம் அவரை எச்சரித்துவிட்டுக் கடிதத்தைப் படிக்கலானார். அது வருமாறு:—

"......கலெக்டர் ஆபீஸ்,

விசுவநாதய்யருக்கு,

தாங்கள் தங்களுடைய வாசக்கிருஹமாக வைத்துக் கொண்டிருக்கும்......தெரு...... நம்பர்......வகையறா நான்கெல்லையுள்ள வீடு, இராணுவ உபயோகத்துக்காகத் தேவையா யிருப்பதாக இராணுவ அதிகாரிகளால் எனக்கு அறிவிக்கப் படுகிறபடியால்.........ஜில்லா கலெக்டராகிய நான் நீர் அந்த வீட்டை 48 மணி நேரத்துக்குள்ளாகக் காலி செய்து விடவேண்டுமென்று இந்தியப் பாதுகாப்புச் சட்டப்படி உத்தரவிடுகிறேனென்பதை நீர்—இதன் மூலமாய் அறிவதோடு அல்லாமல் உமது வீட்டுக்கு நியாயமான கிரயம் கொடுக்கப் படுமென்பதையும் தெரிந்துகொள்ள வேண்டும்.

—கலெக்டர்."

கடிதத்தைப் படித்த அருணாசலம் " யுத்த காலமோன்னோ, எல்லாத்துக்கும் தயாரா யிருக்கணும் " என்றார்.

" என்ன ஐயா! கிரகப் பிரவேசம் பண்ணி ஒரு மாசம்கூட ஆகவில்லையே. அதற்குள்ளே வீட்டை விட்டுப் போவதென்றால்? வீட்டுக்கு நான் எத்தனை அடி அஸ்திவாரம் போட்டிருக்கிறேன் தெரியுமா?"

அருணாசலத்துக்கு பயம் வந்துவிட்டது. எங்கே அஸ்திவாரம் எத்தனை அடி என்று அளக்கச் சொல்லப் போகிறாரோ என்று நடுநடுங்கிப் போய் " குறைந்தது முப்பது அடி அஸ்திவாரம் போட்டிருப்பீர்கள். இது ஒண்ணும் நம்பர் வீடு. இந்த வீட்டைப்போல் நான் இதுவரையில் பார்த்ததில்லை. இனிமேல் பார்க்கப் போவதுமில்லை. ஆனால் என்ன பண்ணுகிறது? சர்க்கார் கேட்கும்போது கொடுக்க மாட்டேனென்று சொல்ல முடியுமா?" என்றார்.

"நான் கலெக்டரைப் போய்ப் பார்க்கிறேன்."

"கலெக்டரை மட்டுமல்ல. கவர்னரின் பட்லரை வீட்டிலேயே போய்ப் பார்த்தால் கூடக் காரியம் நடக்காது."

"அப்படியானால்?"

"பேசாமல் வேறு வீட்டுக்குப் போக வேண்டியதுதான்."

"இத்தனை பாடுபட்டுக் கட்டிய வீட்டை விட்டுவிட்டு நான் எங்கே போய்ச் சந்தியில் நிற்கிறது? இந்தச் சாமான்களை எங்கே கொண்டு போய்ப் போடுகிறது? நாற்பத்தெட்டு மணி நேரத்துக்குள் வீடு வேண்டுமென்றால் நம் இஷ்டப்படி கிடைத்து விடுமா?" என்று விசுவநாதய்யர் புலம்பினார்.

"சத்தியாக உங்கள் தம்பி ராமலிங்கத்தின் வீட்டில் போய் இருங்களேன். அப்புறம் சாவகாசமாக வேறு வீடு பார்த்துக் கொண்டால் போகிறது."

"அதுவும் ஒரு யோசனைதான்" என்றார்.

அருணாசலம் விடை பெற்றுக் கொண்டு தப்பித்தோமென்று நாலைந்து மாடிப் படிகளை ஏக காலத்தில் தாவிக் குதித்து ஓடினார்.

* * *

விசுவநாதய்யர் ராமலிங்கத்துக்கு எல்லா விஷயத்தையும் சொன்னார். தன் தமையனார் தன் வீட்டில் வந்து தங்கியிருக்கப் போவதில் ராமலிங்கத்துக்குப் பரம திருப்தி. ஏனெனில் அவர் என்றைக்குமே ஒருவர் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தாப்போல் போல் இரண்டு நாள் இருந்ததில்லை. இந்தச் சந்தோஷ சமாசாரத்தைத் தம் மனைவியிடம் தெரிவிப்பதற்காக அவர் வீட்டுக்கு வேகமாகத் திரும்பி வந்தார். வீட்டுக்குள் நுழையும் போதே, "சாவித்திரி! அண்ணா பங்களாவைச் சர்க்காரிலே மிலிட்டரிக்காக எடுத்துக் கொண்டு விட்டானாம். அண்ணா நம்மாத்திலே வந்து தங்கியிருக்கப் போறாராம். குழந்தை படிக்கிற ரூமிலிருக்கிற சாமான் எல்லாம் ஒழித்து வை. உன் டிரெஸிங் ரூமிலிருக்கிற சாமானெல்லாம் ஸ்டோர் ரூமுக்குக் கொண்டு போயிடு. பால்காரன் கிட்டச் சொல்லி இரண்டு படி கூடப் பால் கொண்டு வரச் சொல்லு. நம்ப படுக்கையெல்லாம் ஹாலில் போடச் சொல்லு......"

"கொஞ்சம் மூச்சுவிட்டுப் பேசுங்கள்" என்றாள் ராமலிங்கத்தின் சஹதர்மிணி.

"அவா நாளைக் காலம்பற வந்துடுவா. இப்பவே முதற்கொண்டு எடுத்து வைச்சால் தானே முடியும்!"

"வந்தா வரட்டும், ஒன்றும் ஒழிக்க வேண்டியதில்லே."

"ஏன்?"

"நான் தான் ஊருக்குப் போகப் போகிறேனே!"

"என்னது?"

"என்னவா! ஒண்ணும் தெரியாது போலே கேக்கறேனே? அன்னிக்கொரு நாள் வயிற்றை வலிக்கிறதுன்னு சொன்னேனே, ஞாபகமில்லேயா?"

"இல்லேயே."

"இருக்காது."

"உடம்பை என்ன பண்ணுகிறது?"

"போகிறது, என்ன பண்ணுகிறதென்று இப்பொழுதாவது கேட்கறேனே. வயிற்றுக் குள்ளே சித்த நாழிக் கொருதரம் கிசுகிசு மூட்டுகிறாப் போலே இருக்கு."

"இதென்ன நான் முன்ன பின்னே கேட்காத வியாதியா யிருக்கே."

"என்னமோ எனக்குன்னு மாயமா வந்திருக்கு."

"டாக்டரிடம் காண்பிக்கலாமா?"

"டாக்டரும் வேண்டாம், கீட்டரும் வேண்டாம். எனக்குச் சீமை மருந்தெல்லாம் சரிப்பட்டு வராது. ஊருக்குப் போய் நாட்டு வைத்தியம் பார்த்துக் கொள்கிறேன்."

ராமலிங்கம் சிறிது யோசனை செய்து பார்த்தார். தன் தமையன் குடும்பத்தினர் வருவது சாவித்திரிக்குப் பிடிக்கவில்லையென்றும் அதற்காகவே ஊருக்குக் கிளம்புகிறாளென்றும் ஊகித்தார். அவள் இருந்து ஏதாவது வம்பு செய்து கொண்டிருப்பதை விடச் சிறிது காலம் ஊருக்குப் போய் விட்டு வரட்டுமென்று தீர்மானித்தார். ஆகவே, அவள் ஊருக்குப் போகவே போகக் கூடாதென்று பிடிவாதம் பிடித்தார்! அவருடைய சூழ்ச்சி பலித்தது. சாவித்திரி தான் போகத்தான் போவேனென்று ஒற்றைக் காலால் நின்றாள். மறு நாள் அவளை அனுப்புவதைப் பற்றி ராமலிங்கம் தன்னுடைய மைத்துனன் மகாதேவனுக்குக் கடிதம் எழுதினார்.

* * *

இது போன்ற கடிதங்கள் தவறிப் போய்க்கூடத் தாமதப் படுவதில்லை யாகையால் அது மறுநாளே மகாதேவனுக்குக் கிடைத்தது. மகாதேவனுக்குத் தங்கையென்றால் உயிர். அவன் சந்தோஷத்துடன் மனைவியிடம் போய் "தங்கம்! நாளைக்குச் சாவித்திரி வரப் போகிறாளாம்" என்றான்.

"அது யாரது?" என்று தங்கம் மிகவும் நிதானமாகக் கேட்டாள்.

"ஒண்ணுமே தெரியாதுபோல் பேசு கிறயே நம்ம சாவித்திரிதான்."

"ஓஹோ! உங்க தங்கையா! அப்படிச் சொல்லுங்கோ! எனக்கு அவள் ஞாபகமே வல்லே. இப்போதானே போன மாசம் வந்திருந்துட்டுப் போனு. அதற்குள்ளே அவள் எங்கே வரப்போருன்னு நினைச்சேன்."

மகாதேவன் கடிதத்தைப் படித்துக் காண்பித்தான். அதில் விசுவாநதய்யர் சொந்த வீட்டைச் சர்க்கார் எடுத்துக் கொண்டது முதல் எல்லா விஷயங்களும் விவரமாய் எழுதப்பட்டிருந்தன. கடிதத்தைப் படித்து முடித்த சமயம் தோட்டக்காரன் வந்து நின்று கொண்டு "போய்ப் பூஞ்செடிகள் வாங்கிக் கொண்டு வரட்டுமா?" என்றான்.

"வேண்டாம்! வேண்டாம்! போன மாசம் வாங்கி வைச்சதெல்லாம் தான் குட்டிச்சுவராய்ப் போச்சே. நானும் எத்தனையோ குழந்தைகள் பார்த்திருக்கேன். இது மாதிரியா? வேரைப் பிடுங்கி வைச்சிண்டுதான் விளையாடுவேன் என்று பிடிவாதம் பண்ணும்? நல்ல மருமான்!"

"கிட்டு என்ன அவ்வளவு விஷமமா!"

"நம்ம ராஜத்தையும், கோபுவையும் அவன் பூச்சாண்டின்னு பயமுறுத்தியது இன்னும் அவாளுக்குப் பயம் தெளியவில்லே. எங்கம்மா திருஷ்டி சுத்திப் போடச் சொல்லி நூரோரு கடிதாசிலேயும் எழுதரூன். நான் ஊருக்கே போய்த்தான் ஏதாவது பண்ணனும்."

"தங்கம்! நீ இப்படியெல்லாம் பேசினுயோ எனக்குப் பிரமாதக் கோபம் வந்துவிடும். உன் பிள்ளைகள் மட்டும்......"

"என் பிள்ளைகளைப் பற்றி நான் சாவகாசமா வந்து பேசிக்கிறேன். வண்டி எத்தனை மணிக்குக் கிளம்புகிறது சொல்லுங்கோ. நீங்க அப்பாவைப் பணம் கடன் கேட்டிருந்தேனே, நான் போய் அனுப்பச் சொல்கிறேன்" என்ருள் சாவித்திரி.

மகாதேவன் பதில் பேசாமல் ரயில்வே 'கெயிடை'த் தேடத் தொடங்கினன். அன்றிரவு ஸ்ரீமதி தங்கம்மாளும் ராஜமும் கோபுவும் ஸ்ரீமான் மகாதேவன் பின்தொடர ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றார்கள்.

* * *

அன்று ரயிலில் ஒரே கூட்டம். தங்கம்மாள் குழந்தைகளுடன் மிகவும் சிரமப்பட்டு ஸ்திரீகள் அதிகமாயிருந்த ஒரு வண்டியில் ஏறிக்கொண்டாள். சிறிது நேரத்துக்கெல்லாம் வண்டி கிளம்பிற்று.

விடியற்காலை நாலு மணி சுமார் இருக்கும். வண்டி தங்கம் இறங்கவேண்டிய ஊரின் சமீபம் வந்து கொண்டிருந்தது. அப்பொழுது தங்கத்துக்கும் ஜன்னல் கட்டைக்கும் நடுவில் அரைச் சாண் இடத்தில் கஷ்டப்பட்டுக்



ஏதாவது ஒரு நல்ல அழகான வீட்டைப் பார்த்தால் ...

கொண்டு உட்கார்ந்து தூங்கிக்கொண்டே யிருந்த ராஜத்துக்குக் கஷ்டமா யிருந்தது. அவன் அப்படியே பெஞ்சியின்மேல் எழுந்து நின்றுகொண்டே தூங்கலானான். அப்பொழுது அவன் ஒரு சுவாரஸ்யமான கனவு கண்டு கொண்டிருந்தான். அதில் அவன் எதிர்த்த வீட்டுச் சோமுவுடன் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறான். சோமுவின் சிண்டு அவன் கையில் எக்கச் சக்கமாய் அகப்பட்டுக் கொண்டு விட்டது. அதைப் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கியதும் சொப்பனம் கலைந்து போய்க் கீழே உட்கார்ந்தான்.

அவன் உட்கார்ந்த மறு கணம் வெகு வேகமாய்ப் போய்க்கொண்டிருந்த ரயில் வண்டியின் வேகம் திடீரென்று குறைந்து போய்க் கடைசியில் வண்டி நின்று விட்டது. அது அப்படி நின்றது ஒரு ஆற்றுப் பாலத்துக் கருகில். ரயில்வே கார்டும், வண்டியிலிருந்த சில போலீஸ்காரர்களும், சிப்பாய்களும் ஓடோடியும் வந்தனர். "அபாயச் சங்கிலியை இழுத்தது யார்?" என்று தங்கம்மாள் ஏறியிருந்த வண்டியிலிருந்த ஒவ்வொருவரையும் விசாரித்தார்கள். யாரும் தாங்கள் இழுத்ததாக ஒப்புக்கொள்ளவில்லை. அதிகாரிகள் ராஜத்தைக்கூட விசாரித்தார்கள். அவனும் இல்லையென்று சொல்லிவிட்டான். அபாயச் சங்கிலியைச் சோமுவின் சிண்டென்று நினைத்துக்கொண்டு இழுத்திருக்கும்போது அவன் சொன்னது பொய்யாகாது அல்லவா?

வண்டி மறுபடியும் கிளம்பி தங்கம்மாளின் ஊர் போய்ச் சேர்ந்தது. அவள் வருவதைப் பற்றி மகாதேவன் தன் மாமனாருக்குத் தந்தி யடித்திருந்தானாதலால் அவர் ஸ்டேஷனுக்கு வந்து பெண்ணையும் பேரன்களையும் அழைத்துக்கொண்டு போனார்.

ரயில் திடீரென்று நின்றதைப் பற்றியும், அபாயச் சங்கிலி இழுத்ததைப் பற்றியும் ஒரு தகவலும் தெரியாத அதிகாரிகளுக்கு என்னென்ன சந்தேகமெல்லாமோ தோன்றின. அதுவும் ரயில் வண்டி ஒரு பாலத்தருகில் நின்றது அவர்களுடைய சந்தேகத்தை அதிகப் படுத்திற்று. பயங்கர இயக்கக்காரர்களோ, அல்லது ஐந்தாம் படையினரோ யாரோ விஷமம் செய்ய முயற்சித்திருக்கலா மென்று ஜில்லா அதிகாரி அபிப்பிராயப்பட்டார். அவ்வளவுதான், மறுநாள் உத்தரவின் பின் உத்தரவுகள் வெளியாக ஆரம்பித்தன. ரயில் நின்ற இடத்திலிருந்து அரை மைல் தூரம் வரையில் யாரும் வரக்கூடாதென்று தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. ஐந்து பேருக்கு மேல் சேர்ந்து ரயில் நின்றதைப் பற்றிப் பேசுவது தடை செய்யப்பட்டது. ஒரு ஐம்பது மைல் தூரத்துக்கு ரயில் பாதையை இராப் பகல் பாதுகாத்துவரப் பிரத்தியேகப் போலீஸ்காரர்கள் நியமிக்கப்பட்டனர். நிற்க.

* * *

விசுவநாதய்யர் தம் சகோதரன் வீட்டுக்கு வந்த சில தினங்கள் வரை சரியா யிருந்தார். அப்புறம் ஏதோ பிரமை பிடித்தவர் போலாகி விட்டார். கதவில் துளி அழுக்குப் பட்டிருந்தாலும் அதை ஒரு சலவை போட்ட அங்கவஸ்திரத்தைக் கொண்டு வந்து துடைத்து விடுவார். தெருவில் போய்க் கொண்டிருக்கும்போது எதாவது ஒரு நல்ல அழகான வீட்டைப் பார்த்தால் அதன் எதிரில் போய் நின்று கொண்டு "ஒண்ணும் நம்பர் வீடு" "ஒண்ணும் நம்பர் வீடு" என்று சொல்லிக் கொண்டே யிருப்பார்.

தம்பியின் வீட்டுக்கு வந்தது முதல் அவர் தமது சொந்த வீட்டுப் பக்கம் போகவில்லை. அதைப் பார்க்க அவருக்குச் சகிக்க முடியாதது போலிருந்தது. ஆனால் பத்துப் பதினைந்து தினங்கள் கழித்து, அவர் அகஸ்மாத்தாகத் தமது பழையவீட்டின் பக்கம் போனார். வீடு அவர் பூட்டிய படியே கிடந்தது. அங்கே ஆபீஸும் இல்லை, ஒன்றும் இல்லை. விசுவநாதய்யர் ஆச்சர்யத்துடன் வீட்டு முன் பக்கமிருந்த தாழ்வாரத்துக்குச் சென்றார். அங்கே யிருந்த அவருடைய சொந்தத் தபால் பெட்டியில் ஒரு கடிதம் அவர் பேருக்கு இருந்தது. அதை அவசரமாக எடுத்துப் பிரித்து படித்தார்.

"என்னுடைய...தேதி உத்தரவில் கண்ட படி தங்களுடைய வீடு இராணுவ உபயோகத்துக்குத் தேவையில்லை"

என்று கலெக்டர் அவசரத் தந்தி கொடுத்திருந்தார். தந்தி ஆபீஸில் அதைத் தந்தியாக அடிக்கவில்லை. இரண்டு மூன்று நாள் வைத்துக்கொண்டிருந்து விட்டுப் பிறகு தந்தியை எழுதித் தபாலில் போட்டிருந்தார்கள்!

பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமா? விசுவநாதய்யருக்கு ஏற்பட்ட சந்தோஷத்துக்கு அளவில்லை. அவருக்குக் கண்ணுக்கு கண்ணான அவருடைய வீடு மறுபடியும் கிடைத்து விட்டது. ஆனால், அது வீடாக இருந்தால், பாவம் அவருக்கு அதைக் கட்டிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் உகுக்க முடியாமற் போயிற்று!

ஆனால் ...... ஜில்லா அதிகாரிகள் தடை உத்தரவுகளை இன்னும் இரண்டு மாத காலத்துக்கு நீடித்திருக்கின்றனர்.

# பரந்த வெளியில்



டீ யை அனுபவித்து அருந்துவதற்கான சமயங்களில் ஒன்று "பிக்னிக்" கள். குடும்பக் கூட்டமானாலும் சரி, நண்பர்கள் கூட்டமானாலும் சரி, டீ க்குத்தான் அங்கு பிரதான இடம். டீ மாத்திரம் கொடுக்கவல்ல ஆனந்தத்தால்தான், நீங்கள் திறந்த வெளியின் அழகையும், களைப்பாறுதலாலுண்டாகும் இன்பத்தையும் அனுபவிக்க முடிகிறது.



எங்கள புதிய பிரசுரமாகிய "டீ அருந்துவதற்கான சமயங்கள்" என்ற சித்திரங்களுடன் கூடிய புத்தகத்தில், டீ அருந்துவதற்கான சில விசேஷ சமயங்களைப் பற்றி இங்கிலீஷில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த விளம்பரத்தைக் கத்தரித்து, உங்கள் பெயர் விலாசத்துடன், கீழ்கண்ட விலாசதாருக்கு அனுப்பினால், அவர் இப்புத்தகத்தின் பிரதி ஒன்று இலவசமாக அனுப்புவார்: கமிஷனர் (இந்தியாவுக்கு), இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டு, தபால் பெட்டி நெ. 2172, கல்கத்தா.



## இந்தியன் டீ

அருந்துங்கள்

புத்துயிரளிக்கும் உயரிய பானம்



இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது IK 159

பரிசு பெற்ற கட்டுரை

# குழந்தை வளர்ப்பு

[ ஸ்ரீமதி சுந்தரம்மாள் ]

"கோமளம்! இன்று நாம் இருவரும் சரஸ்வதியின் வீட்டிற்குப் போகலாமா? உன் குழந்தைகளுக்கு இன்று விடுமுறை தானே? சமத்தாய்ப் படித்துக் கொண்டாவது விளையாடிக் கொண்டாவது இருப்பார்கள். நாம் போய் சரஸ்வதியைப் பார்த்து விட்டு வரலாமே. அவளும் வெகு நாளாய் நம்மிரு வரையும் வருந்தி அழைக்கிறாள்."

"சௌந்திரம்! என்மேல் கோபிக்காதே. எனக்கு அவள் வீட்டிற்குப் போவதற்குப் பிரிய மில்லை. எனக்கும் இங்கே கொஞ்சம் வேலை யிருக்கிறது."

"ஏன் அங்கே போக இஷ்டமில்லை யென்று சொல்லுகிறாய் கோமளம்! ஏதாவது மனஸ்தாபமா யென்ன? ஏன் என்னிடம் சொல்லக்கூடாது?"

"இல்லை, இல்லை. அதெல்லாம் ஒன்று மில்லை—அங்கே வீடு நிறையக் குழந்தைகள். எல்லாம் ஏக இரைச்சலும், சண்டையும் போட்டுக் கொண்டு வீட்டை கிர்த்துளி செய்து கொண்டிருக்கும். எதற்காவது ஜுரம், தலைவலியா யிருந்தாலும் எனக்கு ஆச்சரியமா யிருக்காது. ஏனென்றால், அவர்களில் யாருக்காவது எப்பொழுதும் ஒரு தலைவலியோ, காய்ச்சலோ இருப்பதுதான் வழக்கம். யாருக்காவது வைசூரியா யிருந்தாலும் இருக்கும். இப்படியெல்லாம் இருக்க, நாம் ஏன் அங்கு போக வேண்டும்?"

"பாவம்—சரஸு என்ன செய்வாள்? அவளுக்குக் கை நிறையக் குழந்தைகளைக் கொடுத்துப் பரிசோதிக்கிறார் பகவான். அவள் கஷ்டப்படுகிறாள். நம் போன்றவர்கள் அவளுக்கு உதவி செய்வதற்குப் பதிலாக அங்கே போவதற்குக்கூட நடுங்குகிறோம்."

"குழந்தைகளைக் கொடுத்த கடவுள் அறிவையுந்தானே கொடுத்திருக்கிறார்? நாம் அந்த அறிவை வைத்துக்கொண்டு ஏன் நன்றாய் வளர்க்கக்கூடாது? சரஸு குழந்தை வளர்க்கும் வகையெல்லாம் தப்பு — சுத்தத் தப்பு. ஆகையால்தான் கஷ்டப்படுகிறாள். அவள் மட்டும் அறிவுடன் குழந்தைகளை வளர்த்தால் என்ன அழகாயிருக்கும்! எவ்வளவுக்கெவ்வளவு சமத்தாகவும், சுத்தமாகவும், தேக புஷ்டி யுடனும் குழந்தைகள் இருக்கிறார்களோ, அவ்வளவுக்கவ்வளவு பெருமை யல்லவா? மனதிற்கும் சந்தோஷ மல்லவா? நிறையக் குழந்தைகளிருப்பது சோதனையா? இல்லவே இல்லை; கடவுளின் பரிசளிப்பு — அப்படித் தான் நாம் கருத வேண்டும்."

"கோமளம்! பெரிதாய்ப் பிரசங்கமே ஆரம்பித்துவிட்டாயே. வாய்ச் சொல் சுலபந்தான். ஆனால் அதை அநுஷ்டானத்திற்குக் கொண்டு வருவது சிரமமான காரிய மல்லவா? நம் தாய்மார்கள் படும் கஷ்டம் தான் எத்தனை? பிடிவாதக் குழந்தைகளையும், வியாதி, வெக்கை பிடித்த குழந்தைகளையும் வைத்துக் கொண்டு என்ன செய்வது? பூர்வ கர்மந்தான்!"

"கர்மம், விதி என்றெல்லாம் சொன்னால் எனக்குக் கோபம் வரும், சௌந்திரம்! கடவுளின் அநுக்கிரகம் ஒன்று உண்டு என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனாலும், எல்லாவற்றையும் கருமமென்று கருதிக் கடவுள் தலைமேல் பாரத்தைப் போட்டுவிட்டு, நம்மால் ஆகக் கூடியது ஒன்றுமே யில்லையென்று கையைக் கட்டிக் கொண்டு சும்மா இருப்பதா? வியாதி, பிடிவாத குணம் மற்றும் உள்ள குற்றங்கள் எல்லாம், ஏதோ கூடவே பிறந்தாற்போல பேசுகிறாயே! அதுதான் அறிவின்மை! சரஸுவைப் பார்! குழந்தைகளின் தொந்தரவு பொறுக்க முடியவில்லை



வீடு நிறையக் குழந்தைகள்



குழந்தைகள் எதிரில் சண்டை போடுவதோ...

யென்று தெருவில் விற்கும் தின்பண்டங்களை வாங்கிக் கொடுத்து வியாதியையும் விலைக்கு வாங்குகிறான். எப்பொழுது காரணத்தோடு கண்டிக்கவேண்டுமோ, அப்பொழுது கண்டிக்காமல் அடாத சமயத்தில் காரணமின்றி அவர்களின் மன உற்சாகத்தைக் குறைத்து, தன் மனோ நிலைக்குத் தக்கவாறு கோபிப்பதும் கண்டிப்பதுமாக விருக்கிறான். அப்படிச் செய்வது தான் மிகவும் பிசகு என்பதை அவன் தெரிந்து கொள்ளவில்லை.

"நீ என்னவோ அதிர்ஷ்டசாலி, ராம இலக்ஷ்மணரைப்போல இரண்டு குழந்தைகளை வைத்துக் கொண்டு ஆனந்தமா யிருக்கிறா யென்று நினைத்தேன். அவர்களை வளர்ப்பதில் இவ்வளவு விஷய மிருக்கிறதென்று எனக்குக் கூடத் தெரியாது. கொஞ்சம் விஸ்தாரமாகத் தான் குழந்தை வளர்ப்பைப் பற்றி எடுத்துச் சொல்லேன். நானும் இதர அநேக தாய்மார்களும் (நமது சஸோ உள்பட) அந்த விஷயங்களைத் தெரிந்துகொண்டு இருந்துவிடுவோம்."

"குழந்தை வளர்ப்பைப் பற்றி அவ்வளவு சுலபமாகச் சொல்லிவிட முடியுமா? அது உண்மையாக ஒரு பெரிய துறை. மேல் நாட்டாரைப் பார். இத்துறையில் எவ்வளவோ ஆராய்ச்சி செய்து ஒவ்வொருவரும் ஒவ்வொரு அநுபவத்தையும், அதற்கு என்ன என்ன செய்வது, எப்படி எப்படிச் செய்வது என்றெல்லாம் யோசித்துப் பலபேர் கூடி ஒரு பெரிய புஸ்தகம் தாய்மார்களுக் கென்றே வெளியிட்டிருக்கிறார்கள்! அப்படிப் பட்ட புத்தகங்கள் தமிழில் வரவேண்டும். எனினும், என் அநுபவத்தைக் கொஞ்சம் சொல்லுகிறேன் கேள்.

குழந்தையை ஒரு வயதிற்குள் வளர்ப்பதெல்லாம் பாதுகாப்புதான். அது தாயின் பொறுப்பு. வயிற்றிற்கு அதிகமாகப் பாலைக் கொடுத்து அஜீர்ணம், மந்தம் ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். குழந்தை உடம்பின் மேல் தோல் மிகவும் மிருதுவான தன்மையால், எண்ணெய் தடவி தினந்தோறும் ஸ்நானம் செய்து வைக்கவேண்டும். கால நிலையைப் பார்த்துக்கொண்டு ஜாக்கிரதையாகச் செய்ய வேண்டும். ஸ்நானம் செய்விக்கிறதற்குக் கொஞ்ச நேரத்திற்கு முன், கொஞ்சம் ஆலிவ் எண்ணெயைத் தடவி, ஊறவைத்து, சோப்புத் தேய்த்து வெந்நீரில் குளிப்பாட்டி வந்தால், ஒருவிதத் தோல் வியாதியும் இல்லாமல் வளர்க்கலாம். ஆலிவ் எண்ணெய் உடம்பில் தேய்ப்பதால் உணவாகக் கூட ஆகிறது என்று சொல்லுகிறார்கள். உடுப்பு விஷயத்தில் முக்கியமானது, அழுக்கின்மை. துல்லியமான வெள்ளைப் பருத்தி ஆடைகளுக்கு மிஞ்சியது எதுவுமில்லை. சுத்தமான ஆடைகள் அடிக்கடி மாற்றிக் கொண்டிருக்கவேண்டும்.

ஒரு வயதுக்குப் பிறகு தான் மன ஆரோக்கியத்தையும் அதிகமாய்க் கவனிக்க வேண்டியிருக்கிறது. குழந்தைகளின் மூளை மெழுகை ஒத்தது. நாம் எப்படித் திரும்பினாலும் திரும்பக்கூடிய சக்தி வாய்ந்தது. ஆகையால் அப்படிக் கிடைத்த வஸ்துவை நாம் வெகு அழகாகச் சிற்பிக்க வேண்டும்.

முதலாவது — பெற்றோர்களின் கடமையாவது: குழந்தைகளின் மன ஆரோக்கியத்தையும், தேகாரோக்கியத்தையும் சேர்ந்தாற்போல் கவனித்து விருத்தி செய்து வர வேண்டும். தாயார் குழந்தை கூடவே ஜாஸ்தி பழகுபவளாதலால் அவளைத்தான் இந்தக் கடமை அதிகமாய்ச் சேரும். அதற்குக் குழந்தையின் மனப்பான்மையை அறிந்து நடக்க வேண்டும். சிறிய பிராயத்தில் குழந்தை மனதில் படியும் மனப்பாடம் ஸ்திரமாய் ஊன்றிவிடும். ஆகையால்தான் அந்த இளம் புத்தியில் நல்ல படமாகவே அச்சிட வேண்டும். இத்தகைய படத்திற்கு நாம் காண்பிக்கும் உதாரணந்தான் பிரதானம். குழந்தைகள் எதிரில் நாம் சந்தோஷமாகவும்,



ஒவ்வொரு குழந்தைக்கும் பூச்சாண்டி !

சுறு சுறுப்பாகவும், சரியானபடி நடந்து கொண்டால் அவர்கள் நம்மைப்போலவே இருக்க முயல்வார்கள். குழந்தைகள் எதிரில் சண்டை போடுவதோ, கோபமாகப் பேசுவதோ கூடாது. வேலைக்காரனைக் கூட அதட்டக்கூடாது. இது மிகவும் அவசியம்.

இரண்டாவது முக்கியமான விஷயம் என்னவென்றால் :— குழந்தைகளுக்குப் பயம் என்பதே பிறவியில் தெரியாது. நாம் அந்த உணர்ச்சியை ஊட்டவே கூடாது. அப்படிச் செய்வதினால் குழந்தைகளைக் கோழை மனமுடையவர்களாகச் செய்கிறோம். நம் வீடுகளில் ஒவ்வொரு குழந்தைக்கும் ஒவ்வொரு விதப் பூச்சாண்டி உண்டு.

சர்வ சதாரணமான 'பூச்சாண்டி' தெருவில் நிற்கும் சிகப்புத் தலைப்பாகை டாணாக்காரனும், தாடிப் பிச்சைக்காரனும்தான்! இந்த பயமுறுத்தல் மிகவும் தப்பு. குழந்தைகள் பயமிகுதியால் பொய் சொல்லவும் திருடவும் கூடக் கற்றுக்கொண்டு விடுவார்கள்! ஆகையால் இந்த விஷயத்தில் ரொம்ப ஜாக்கிரதையா யிருக்க வேண்டும் ......"

"ஆமாம்! பயமுறுத்தா விட்டால் குழந்தை சொன்னதைக் கேட்கவில்லையே. இதற்கு என்ன செய்யச் சொல்கிறாய்?" என்று குறுக்கே கேட்டாள் சௌந்திரம்.

"நீ கேட்பது நியாயம்தான். ஆனால் அதற்கும் ஒரு வழி இருக்கிறது. எந்த விஷயத்தில் சொன்னதைக் கேட்கவில்லை என்பதுதான் முக்கியமான கேள்வி. ஒவ்வொன்றிற்கும் ஏற்றாப்போல் நாம் நடந்து கொண்டால்தானே நம் இஷ்டம்போல் குழந்தைகளைச் சந்தோஷத்துடன் செய்ய வைக்கலாம்?

அநேகமாய் ஆகார விஷயத்திலோ விளையாடும் சாமான்களிலோ அதிக ஆசையினால் தொந்தரவு செய்யக்கூடும். நாம் அப்பொழுது, கேட்பதை உடனே கொடுப்பது போல் கொடுத்துச் சிறிது நேரத்திற்கெல்லாம் வேறு எதிலாவது மனதை மாற்றிவிட்டால் உடனே மனம் மாறிவிடும். குழந்தைகள் ஒன்றைவிட்டு ஒன்றுக்கு மாறுவது வெகு சீக்கிரமாதலால் நாம் அந்தக் குணத்தை உபயோகித்துக்கொண்டு மனதைப் பிடிவாதத்திற்கு இடம் கொடாமல் நம்மிஷ்டம்போல் சுலபமாகத் திருப்பி விடலாம்."

(அடுத்த இதழில் முடியும்)

---

## கவிச் சித்திர விளக்கம்

"முத்தொள்ளாயிரம்" என்பது ஒரு பழமையான அரிய தமிழ் நூல். அதில் இப்போது கிடைத்திருக்கும் பாட்டுக்கள் ஒரு சிலவேயாகும். இவற்றை, ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் எழுதிய இன்றியமையாத விளக்கக் குறிப்புக்களுடன், புதுமைப் பதிப்பகத்தார் புத்தகமாக வெளியிடுகிறார்கள். மேற்படி புத்தகத்திலிருந்து எடுத்தவை பாட்டும் விளக்கமும்.

பெண் யானை ஒன்றின் மேல் ஏறி உலா வந்தான் பாண்டியன். ஒரு கன்னிகை அவனைப் பார்த்துக் காதல் கொண்டு விடுகிறாள். யானை நடந்து வந்ததும் அரசன் அதன் மீது இருந்ததும் மனசை விட்டு அகலவில்லை. அரசன் உருவம் அப்படியே மனதில் நிற்பது பெரிய காரியமல்ல; அவன் ஏறிவந்த யானையின் உறுப்புக்கள் ஒவ்வொன்றும் அப்படி அப்படியே அப்பெண்ணின் உள்ளத்தில் நிற்கின்றன.

யானையினுடைய கால், அடடா, துடி (உடுக்கை) போலவே இருக்கிறது. செவியோ தோலினால் செய்த கேடயந்தான். துதிக்கை எப்படியெல்லாமோ ஆடுகிறது. வாய் தொங்குகிற அழகோ தனி.—யானையின் அழகில் இப்படியெல்லாம் ஈடுபடுகிறாள் அக் கன்னிகை.

ஒரு நாள் அப்பெண் நீராடப் போயிருந்த இடத்தில், குளிப்பாட்டுவதற்காக யானை வந்திருந்தது. அரசனும் நீராட வந்திருந்தான். அப்போது யானையைப் பார்த்துப் பெண் சொல்வதாகப் பாட்டு.

"ஓ யானையே! உன்னை ரொம்பவும் வேண்டிக் கொள்கிறேன். நீராடி விட்டுப் பாண்டிய மன்னனை உன் முதுகில் ஏற்றிக்கொண்டு நீ ஊருக்குள் வரும்போது எங்கள் வீட்டு ஜன்னலோரமாக வரவேண்டும். நான் அங்கே நின்று பார்த்துக் கொண்டிருப்பேன். தெரிகிறதா?" என்று யானையைப் பார்த்துச் சொல்வதில், அரசனைக் கண் குளிரப் பார்த்துவிட வேண்டுமென்ற அவளுடைய ஆத்திரம் வெளியாகிறது.

**இரப்பல் :** கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன் ; **கடி கமழ்தார் :** வாசனை கமழும் மாலை சூடிய ; **சேலேக வண்ணனொடு :** சந்தனம் பூசிய பாண்டியனோடு ; **சேரி புகுதலும் :** ஊருக்குள் பிரவேசிக்கும்போது ; **எம் சாலேகம் சார நட :** எங்கள் வீட்டு ஜன்னலை ஒட்டி நடந்து வரவேண்டும்.



துடியடி, தோல்ச்செவி,
தூங்குகை, நால்வாய்ப்

பிடியே! யான்நின்னை
இரப்பல் — கடிகமழ்தார்ச்

சேலேக வண்ணனொடு
சேரிபுகு தனும், எம்

சாலேகம் சார
நட.

கவிச் சித்திரம்—6

—முத்தொள்ளாயிரம்.




# வீடு மாற்றல்

[ ராஜி ]

மூன்று மாடி உள்ள வீட்டில் வெகு நாட்களாக ஓர் எலி தன் குடும்பத்துடன் வசித்து வந்தது. அந்த எலிக்கு ஏழு குழந்தைகள். ஏழு எலிக் குஞ்சுகளின் உபத்திரவத்தைப் பொறுக்க முடியாமல் எலியும் அதன் மனைவியும் தவித்தன. அதுவுமல்லாமல் எலிக்குக் குழந்தைகளை ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போவதே சரியாக இருந்தது. தினம் இரண்டு குஞ்சுகளாவது மூன்றுவது மாடியிலிருந்து தடபுடவென்று கீழே விழுந்து காயப் படுத்திக் கொள்ளும். எலிக்கும் அதன் மனைவிக்கும் அந்த வீட்டை விட்டு வேறு வீட்டுக்குப் போகவேண்டும் என்று வெகு நாளாக எண்ணம் உண்டு. ஆனால் சரியான வீடே அகப்படாமல் தவித்துக் கொண்டிருந்தன.

ஒரு நாள் காலையில் தினசரிப் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருக்கும்பொழுது எலி அவசரமாகத் தன் மனைவியைக் கூப்பிட்டது. பத்திரிகையில் இருந்த ஒரு விளம்பரத்தைச் சுட்டிக் காண்பித்தது. அதில் எதிர் வீட்டில் வசிக்கும் எலி தன் வீட்டைக் காலி செய்து விடுவதாகக் கண்டிருந்தது. "எதிர் வீட்டு எலியா பத்திரிகையில் விளம்பரம் செய்திருக்கிறது? ரொம்ப நல்லது. வெகு நாட்களாக அந்த வீட்டுக்குப் போக வேண்டுமென்று நான்கூட எண்ணிக் கொண்டிருக்கிறேனே. அதுவுமல்லாமல் எதிர் வீட்டுக்கு மாடியே இல்லை. நம் குழந்தைகளுக்குத் தகுந்த வீடுதான்" என்று எலியின் மனைவி சொல்லிற்று. "நான் போய் எதிர் வீட்டு எலியை

விசாரித்து வருகிறேன்'' என்று எலி விளம்பிற்று.

மாடிவீட்டு எலி, எதிர் வீட்டை அடைந்ததும், ''வாருங்கள், வாருங்கள்'' என்று எதிர் வீட்டு எலி வரவேற்றது. ''நீங்கள் இந்த வீட்டைக் காலி செய்யப் போகிறீர்களாமே?'' என்றுமாடிவீட்டு எலி கேட்டது. ''ஆமாம், ஆமாம். மாடியிருக்கும் வீட்டிற்குப் போகலாம் என்று இருக்கிறேன்'' என்றது எதிர் வீட்டு எலி. ''அப்படியானால் உங்கள் வீட்டிற்கு நான் வருகிறேன். என் வீட்டிற்கு நீங்கள் வருவதுதானே'' என்றது மாடி வீட்டு எலி. ''மிகவும் சந்தோஷம், உங்கள் வீட்டிற்கு வர வேண்டும் என்றுதான் எனக்கும் என் மனைவிக்கும் வெகு நாட்களாக ஆசை'' என்றது எதிர்வீட்டு எலி. ''இன்றைய தினமே நாம் வீடு மாற்றிக்கொண்டால் என்ன? இன்று நாளும் நன்றாக இருக்கிறது'' என்று எதிர் வீட்டு எலி சொல்லவே, ''சந்தோஷம்; இப்பொழுதே என் மனைவியிடம் சொல்லிச் சாமான்களை எடுக்க ஏற்பாடு செய்கிறேன்'' என்று சொல்லி, மாடி வீட்டு எலி புறப்பட்டது. புறப்படும் சமயத்தில் மாடி வீட்டு எலிக்குச் சந்தேகம் வந்து ''உங்கள் வீட்டில், காற்று நன்றாக வருமா?'' என்று எதிர் வீட்டு எலியை விசாரித்தது. ''ஆஹா, காற்றுவது காற்று! ஆளையே தூக்கிக் கொண்டு போகும்'' என்று பதில் வந்தது.

அடுத்த நிமிஷம் மாடிவீட்டு எலி, அதன் மனைவி, அவற்றின் குழந்தைகள் யாவும் வீட்டில் இருக்கும் சாமான்களை ஒவ்வொன்றாகத் தூக்கிக் கொண்டு எதிர் வீட்டுக்குச் செல்ல ஆரம்பித்தன. ஓர் எலிக் குஞ்சு விளையாட்டு யானையை இழுத்துச் சென்றது, மற்றொரு எலிக் குஞ்சு பம்பரத்தை எடுத்துச் சென்றது. இரண்டு எலிகள் வண்டிகள் நிறைய சாமான்களை வைத்து இழுத்துச் சென்றன. அம்மா எலி வீட்டில் இருந்த குடங்களை எடுத்துச் சென்றது. எலித் தாத்தா ஒரு பெரிய மூட்டையை முதுகில் தூக்கிக் கொண்டு மெதுவாக நடந்தது. எலி மாமா படுக்கையை எடுத்துக்கொண்டு சென்றது.

அதே மாதிரி எதிர் வீட்டு எலியும், அதன் மனைவியும் அதன் குழந்தைகளும் தங்கள் சாமான்களை எடுத்துக் கொண்டு மாடி வீட்டு எலியின் வீட்டுக்குச் செல்ல ஆரம்பித்தன. அச் சமயத்தில் மாடி யில்லா வீட்டிற்கும் மாடியிருக்கும் வீட்டிற்கும் நடுவில் ஒரு பெரிய ஊர்வலம் போலிருந்தது. இரண்டு வீட்டு எலிகளும் மிகவும் கஷ்டப்பட்டு வேலை செய்தன. சாமான்களைத் தூக்கிக்கொண்டு போய் மற்றொரு வீட்டில் சேர்ப்பதிலேயே கவனத்தைச் செலுத்தின. அன்று முழுவதும் சாமான்கள் இந்த



வீட்டிற்கும் அந்த வீட்டிற்கும் போய்க் கொண்டு வந்ததே தவிர ஒரு வீட்டுச் சாமான்களாவது முழுவதும் மாற்றப்பட்டதாகத் தெரியவில்லை.

"இன்று மத்தியானத்திற்குள் சாமான்களை மாற்றிவிடலாம்" என்று மாடி வீட்டு எலியின் மனைவி சொல்லிற்று. ஆனால் மாலை ஆறு மணி ஆகியும் பாதி சாமான்கள் அப்படியே இருந்தன. எலி களைத்துப் போய் ஒரு நாற்காலியில் உட்கார்ந்தது. "ஆமாம்; நம் வீட்டுக் குழந்தைகள் யாவும் வியர்வை கொட்டச் சாமான்களைத் தூக்கிக்கொண்டு போயும் சாமான்கள் குறைந்தபாடில்லையே!" என்றது எலியின் மனைவி.

அதே சமயத்தில் எதிர்வீட்டு எலி "நாள் முழுவதும் நாம் தூக்கிச் சென்றும் பாதி சாமான்களுக்கு மேல் இருக்கிறதே" என்று தன் மனைவியிடம் சொல்லிக் கொண்டிருந்தது.

அப்பொழுது எலியின் மூத்த பையன் "இது என்ன இது? எங்கள் அப்பாவின் படத்தை இப்பொழுதுதான் கொண்டு வைத்தேன். மறுபடியும் நீ ஏன் திரும்பி எடுத்து வருகிறாய்?" என்று எதிர்வீட்டு எலியின் பையனைக் கேட்டது.

"ஆமாம்; நான் தவறி எடுத்து வந்துவிட்டேன். நான் இப்போதுதான் கொண்டு வைத்த முக்காலியை நீ ஏன் எடுத்து வருகிறாய்?" என்று கேட்டது. இரண்டு எலிக் குஞ்சுகளும் விழித்தன.

அப்பொழுது மாடி வீட்டு எலியும், எதிர் வீட்டு எலியும் ஓடோடி வந்து சந்தித்து விஷயத்தைத் தெரிந்து கொண்டு குபீரென்று சிரித்தன. "இப்பொழுதுதான் தெரிந்தது. நாம் சாமான்களைக் கொண்டுவைப்பதும் மறுபடியும் நம் குழந்தைகள் திருப்பி எடுத்து வருவதும் வெகு வேடிக்கைதான்!" என்று சொல்லிச் சிறிது நேரம் சிரித்த பிறகு, குழந்தைகளைப் பார்த்து, "போதும்; நீங்கள் சாமான் எடுத்துக் கொண்டு போய் வைத்து ரொம்பவும் களைத்துப் போய்விட்டீர்கள். இனிமேல், விளையாட ஓடுங்கள்!" என்றன.

பிறகு, சற்று நேரத்திற்குள் அவரவர்களின் வீட்டில் அவர்களுடைய சாமான்கள் சரியாக வந்து சேர்ந்தன என்று சொல்லவும் வேண்டுமா?

### மணிக் கதை—4.









காலண்டரை மாட்டுவதற்குக் கண்டு பிடித்த இடம்!



# காலக்ஷேபம்

## பிற்கால உத்தியோகம்

**உபாத்தியாயர் :**—ஏண்டா ரகு. உனக்குக் கடா மாடு மாதிரி வயதாகி விட்டது. அந்த சின்னப் பையனைப் போட்டு அடிக்கிருயே. நீ பெரியவனுனல் என்ன செய்யப் போகிருயோ?

**ரகு :**—உபாத்தியாயர் வேலை பார்க்கப் போகிறேன்.

—ஜி. கே. மூர்த்தி.

* * *

## பத்திரிகை யோக்யதை

**முதல் திருடன்** (கொள்ளை யடித்து வந்த பணத்தை எண்ணிப் பார்த்துக் கொண்டிருக்கும் சகபாடியைப் பார்த்து) :—ஏண்டா வேலை மெனக்கிட்டு எண்ணிப் பார்த்துக் கிட்டிருக்கே? நாளைக்கி பேப்பர்லே பாத்தா எம்புட்டுன்னு தெரிஞ்சு போவுது.

**இரண்டாவது திருடன் :**—அண்ணே! இப்பவெல்லாம் அஞ்சாயிரம் போனுப் பத்தாயிரம் போச்சுன்னு சொல்லிப் பேப்பர்லே போடுருங்க. சரியா எண்ணி வச்சுக்கிட்டா, மறுப்புப் போடலாமுன்னு தான் எண்ணி வைக்கிறேன்.

—சு. மூ. சொக்கலிங்கம்.

* * *

## பரவாயில்லை

**வீட்டில் குடியிருப்பவர்** (வீட்டுக்காரரைப் பார்த்து):—இந்த வீட்டில் ராத்திரி தூங்க முடிகிறதில்லை. சற்றுக் கண்ணயர்ந்ததும் எலிகள் வந்து நர்த்தனமாடத் தொடங்கி விடுகின்றன.

**வீட்டுக்காரர் :**—நீங்கள் கொடுக்கும் பத்து ரூபாய் வாடகைக்குத் தேவலோகத்திலிருந்து ரம்பை, ஊர்வசி வந்து நர்த்தனமாட வேண்டுமோ?

—எஸ். சுந்தரராஜன்.

* * *

## தலை விதி

**நண்பர்:**—என்ன டாக்டர்! எங்கே அவசரமாப் போருப்பலே இருக்கு?

**டாக்டர்:**—அவசரந்தான். அடுத்த தெருவிலே ஒரு ஆப்ரேஷன் கேஸு; சீக்கிரமாய் அதைக் குளோஸ் பண்ணிட்டு வந்துடறேன்.

—எம். கணபதி.

## புன்னகை மறைந்தது

வெகு நேரம் கழித்துச் சாவகாசமாக டாக்டர் புன்னகையுடன் வந்தார். ஹாலில் ஐந்தாறு பேர் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள்.

"யார் இங்கே உங்களில் அதிக நேரம் காத்துக் கொண்டிருந்தது? அவரை முதலில் கவனிக்கிறேன்!" என்ருர் டாக்டர்.

"நான்தான்—தாங்கள் கொடுக்க வேண்டிய பாக்கிக்கு!" என்று மளிகைக் கடைக்காரன் கோட்டுப் புஸ்தகத்தை நீட்டினுன்.

—எச். அக்ஷயலிங்கம்.

* * *

## புரிந்த விஷயம்

(ரயிலில்) **முதல் பிரயாணி :**—தங்கள் கையில் இருப்பது என்ன புத்தகம்? அதை நான் பார்க்கலாமா?

**இரண்டாமவர்:**—இது வேதாந்த சம்பந்தமான புத்தகம். இது அறிவாளிகளுக்குத் தான் புரியும்.

**முதலாமவர் :**—அப்படியானுல் அது தங்கள் கைக்கு ஏன் வந்தது?

—சு. வே. சர்மா.

* * *

## தெரிந்து கொண்டேன்

**தகப்பன்:**—நான் நேற்றுச் சொல்லிக் கொடுத்த பரிணமவாதத்தை நன்ருகக் கற்றுக் கொண்டாயா?

**மகன்:**—நன்ருகத் தெரிந்து கொண்டிருக்கிறேன்.



**தகப்பன்:**—என்ன தெரிந்து கொண்டாய்? சொல்லு பார்ப்போம்.

**மகன்:**—நான் பிறப்பதற்கு முந்தி நீயும் அம்மாவும் குரங்கா யிருந்தீர்கள் என்று தெரிந்து கொண்டேன்.

—ஜி. கே. ராமன்.

# வாழ்க்கை ரகசியம்

"வஸந்தன்"

ஜி. கே. வீரராகவன் வீட்டுக்கு வரும்போது, ஒய்யாரமாகச் சீட்டி அடித்துக்கொண்டு வருவான். சீட்டி அடிக்கவில்லை யென்றால், அவனுக்குப் பிடித்த பின்வரும் பெயர் போன பாட்டை முணமுணத்துக் கொண்டு வந்தால்தான் அவன் குஷியாக இருக்கிறான் என்று அர்த்தம்.

உப்புமாக் கிண்டச் சொல்லடி
ஒய்யாரமான பெண்ணே!
உப்புமாக் கிண்டச் சொல்லடி!

அவன் இந்தப் பாட்டைப் பாடுவதற்கு அவனைக் குற்றவாளியாகச் சொல்ல முடியாது. சந்தோஷம் வரும் போது நல்ல நல்ல பாட்டுக்களாகப் பாட வேண்டும், புதிய புதிய மெட்டுக்களில் கடல் மடை திறந்தது போல் வெளுத்து வாங்க வேண்டும் என்பது தான் அவன் ஆசை. ஆனால் இந்த ஆசை நிறைவேருததற்கும் உப்புமா கிண்டச் சொல்வதற்கும் அவன் தகப்பனார்தான் காரணம்.

சிறு வயதில் மனத்தில் பதிவாகும் சிற்சில விஷயங்கள் ஜன்மம் முழுதும் மறக்காமல் இருக்கும் என்பார்கள். அதே மாதிரி வீரராகவன் சிறு வயதில் அவன் தகப்பனார் மேற்படி பாட்டைத் தினம் நூறு தடவை பாடுவதைக் கேட்டிருக்கிறான். அது அவனுக்கு மனப் பாடமாகி விட்டது. அவன் வாயைத் திறந்தால் இந்தப் பாட்டு தானகக் கிளம்பி ரீங்காரத்வனி செய்யத் தொடங்கிற்று.

வீரராகவன் பாடிக்கொண்டு வீட்டிற்கு வருவது எவ்வளவு வழக்கமாகப் போய்விட்டதோ, அதே மாதிரி வீட்டுக்கு வந்ததும், "லலிதா!" என்று உரக்கக் கூப்பிடுவதும் வழக்கமாகி விட்டது. அந்தக் குரலில் தாபமும், ஆவலும், பிரிவாற்ருமையும் கலந்திருந்தன.

மறு நிமிஷம் அவன் எதிரே வந்து நின்று கொண்டிருக்கும் லலிதாவைப் பார்த்துவிட்டால் 'ஐயோ! பாவம்! ஆபீஸில் எட்டு மணி நேரம் இவளை என்னமாகப் பிரிந்திருக்கிருன்!' என்று வீரராகவன் பேரில் நாம் பரிதாபம் காண்பிக்கத் தோன்றும்.

ஆனால் வீரராகவன் அன்று சாயங்காலம் ஆபீஸிலிருந்து வரும்போது சீட்டி அடித்துக் கொண்டோ, பாடிக் கொண்டோ வரவில்லை. வீட்டிற்கு வந்ததும் பல் வலியால் அவஸ்தைப் படுகிறவன்போல் மௌனமாக உள்ளே நுழைந்தான்.

"இன்னும் காணுமே" என்று லலிதா வாசலில் எட்டிப் பார்ப்பதற்காகக் கூடத்துக்கு வந்தாள். வீரராகவன் பூனை போல் வந்து ஊஞ்சலில் உட்கார்ந்துகொண்டிருப்பதைக் கண்டு அவள் திடுக்கிட்டுப் போனுள்.

"கொஞ்சம் ஜலம் கொண்டு வா! தாகமா யிருக்கிறது!" என்ருன் வீரராகவன்.

"ஏன்? வழியில் ஹோட்டலில் டிபன் சாப்பிட்டீர்களா? ஏதாவது மிளகாயைக் கடித்துவிட்டீர்களா, என்ன?"

"இல்லை ...... அதெல்லாம் ஒன்றுமில்லை! ...... எங்கே! ஜலம் கொண்டு வா! சாப்பிட்டுவிட்டு வெளியில் போய் விட்டு வருகிறேன். எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது."

அவன் குரல் அப்பொழுது புதுக் குரலாகவே தோன்றிற்று. யாரோ பேசுகிறது போல் இருந்தது. லலிதா தண்ணீர் கொண்டு வந்ததும் வீரராகவன் சாப்பிட்டுவிட்டு 'டக்'கென்று வெளியே போய்விட்டான்.

எப்பொழுதுமே வழக்கத்திற்கு விரோதமான விஷயங்கள் நடந்தால் அவ்வளவாக ஸ்வாரஸ்யப்படுவதில்லை. ஒரு நாளில் எட்டு மணி நேரம் தவிர மற்ற நாற்பது மணி நேரமும் வீரராகவன் லலிதாவின் அருகில் இருப்பது தான் வழக்கம், அவள் சமைக்கும்போது கூட அவள் அருகிலிருந்து உதவி செய்து கொண்டிருப்பான். உதவி என்பதில், அரிசி களைவது, தாளித்துக் கொட்டுவது, ருசி பார்ப்பது எல்லாவற்றையும் சேர்த்துக்கொள்ள வேண்டியதுதான். ஓயாமல் வீரராகவன் பேசிக் கொண்டிருப்பான். அதுவும், லலிதாவின் அழகைப் பற்றியும் குண விசேஷங்களைப் பற்றியும்தான் புகழ்ந்து கொண்டிருப்பான் என்று சொல்லவா வேண்டும்?

அதே ஜி. கே. வீரராகவன் இன்றைக்கு மனைவியை ஏறிட்டுக் கூடப்

பார்க்கவில்லை. "லலிதா! என்று வழக்கம்போல் வாய் நிறையக் கூப்பிடவில்லையே!

"ஆமாம், புருஷர்கள் ஆரம்பத்தில் இப்படித்தான் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு கூத்தாடுவார்கள்! அப்புறம் திடீரென்று ஒரு நாள் வெறுப்பு வந்து விடும். தொபுகடீரென்று கீழே போட்டு விட்டுப் போவார்கள்! இப்பொழுது அகமுடையான் உன்னுடன் குழைவதைப் பார்த்துக் கர்வப்பட்டுக் கொள்ளாதே" என்று அடுத்த வீட்டு சண்பகம் சொல்லி வந்தது அப்பொழுது லலிதாவின் நினைவிற்கு வந்தது.

வீரராகவன் எவ்வளவுதான் கெட்டிக்காரனாக இருந்தாலும், ஒரு குறிப்பிட்ட சமயத்தில் பிறர் மனதில் என்ன இருக்கிறது என்று தெரிந்து கொள்ளும் சாமர்த்தியம் இல்லை. அப்படித் தெரிந்திருந்தால், நேரே ஆபீஸ் மானேஜர் வீட்டுக்குப்போய் கடைசியாக ஒரு தடவை கெஞ்சிவிட்டு வருவதற்குப் பதிலாக, நேரே வீட்டுக்குத் திரும்பி வந்து, "லலிதா! நீ அசட்டுப் பிசட்டென்று என்னென்னவோ நினைத்துக் கொண்டிருக்கிறாயே. நீ மனதைக் கஷ்டப்படுத்திக் கொண்டு தான் ஆகவேண்டுமென்றால் எனக்கு வேலை போய்விட்டது என்பதற்காகக் கஷ்டப்படுத்திக் கொள். இந்தப் பொல்லாத யுத்த காலத்தில் சிக்கனம் செய்ய ஆரம்பித்து, என் தலையில் கையை வைத்து விட்டார்கள். உன் கோபத்தையெல்லாம் அந்த ஆபீஸ் மானேஜரிடம் காட்டு. அந்தக் கிராதகனை எவ்வளவு வேண்டுமானாலும் சபி" என்று சொல்லியிருப்பான். லலிதாவும் அவன் ஆலோசனையை நிச்சயமாக ஏற்றுக்கொண்டிருப்பாள். ஆனால், மேற்படி ரஸமான சம்பவம் ஒன்றும் நடக்கவில்லை.

ஆபீஸ் மானேஜரைப் பார்த்து விட்டு திரும்பி வந்து கொண்டிருந்தபோது, வீரராகவனுக்குப் பல் வலியுடன் முதுகுப் பிடிப்பும் சேர்ந்து கொண்டது போல் இருந்தது. வீட்டுக்குள்ளே நுழைந்தபோது, லலிதா ஜன்னல் அருகில் உட்கார்ந்துகொண்டு கண்ணீர் உகுத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான். அவனுக்குத் திகீரென்றது. ஒரு கணம் அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

"லலிதா!" என்று மெதுவாகக் கூப்பிட்டான்.

"எல்லாம் தெர்யும் எனக்கு!" என்றாள் லலிதா. அப்பொழுது

அவளுக்கு அழுகை பொத்துக்கொண்டு வந்தது.

வீரராகவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. "விஷயம் இவளுக்கு எப்படித் தெரிந்தது?" என்று யோசனை செய்தான். ஒருவேளை தன் சிநேகிதன் சுந்தரத்தின் மனைவி இங்கே வந்திருந்தாளோ, விஷயத்தைச் சொல்லி விட்டாளோ என்று சந்தேகித்தான்.

"உனக்குத் தெரிந்து போய் விட்டதா?" என்று கேட்டான் வீரராகவன்.

"பேஷாக. இதுகூடத் தெரியாதா, எனக்கு?" என்றாள் லலிதா.

தனக்கு வேலை போன விஷயத்தை மனைவியிடம் சொன்னால் அவள் மிகவும் வருத்தப்படுவாள் என்றுதான் வீரராகவன் சொல்லவில்லை. அதைத் தவிர அவனுக்கு வஞ்சனை ஒன்றும் கிடையாது.

"இங்கே பார் லலிதா! இதெல்லாம் என் தலை எழுத்து! அதற்காக நீ ஏன் வருந்தப்படுகிறாய்?"

"உங்கள் தலை எழுத்து என்ன? என் தலை விதிதான். கஷ்டப்பட வேண்டும் என்று என் தலையில் எழுதி யிருக்கிற போது நீங்கள் என்ன செய்வீர்கள்?"

"உலகத்தில் கஷ்டம் சுகம் இரண்டும் கலந்துதான் வரும்."

லலிதா கோபமாகப் புருஷனைப் பார்த்தாள்.

"ஆமாம், வாழ்க்கை ரகசியத்தை இதுமட்டுமாவது எடுத்துச் சொல்கிறீர்களே, போகட்டும்."

"நான் இல்லாமல் பின்னே யார் உன்னைச் சமாதானப்படுத்துவார்கள்? கஷ்டத்தைப் பொறுத்துக் கொள்வது தானே புத்திசாலிகளுக்கு அழகு, லலிதா? நீ எவ்வளவோ கெட்டிக்காரி யென்று நினைத்தேன்."

"கெட்டிக்காரி யென்று மட்டுமா நினைத்தீர்கள்? இன்னும் என்னென்ன வெல்லாமோ நினைத்தீர்கள். ஆனால் இன்றைக்கு அசடாகத்தான் தோன்றுகிறேன். நாளைக்குப் பித்துக்குளியாகத் தோன்றுவேன்."

சம்பாஷணை விரஸமாகப் போய்க் கொண்டிருப்பதாக அவனுக்குத் தோன்றிற்று.

"லலிதா! வருத்தத்தால்தான் இப்படிப் பேசுகிறாயென்று தோன்றுகிறது. முதலில் ஊருக்குப் போய்க் கொஞ்சம் ஓய்வு எடுத்துக்கொள். நிம்மதியாக ...."

"ஆஹா! நீங்கள் கேட்டுக் கொள்வதற்கு முன்னாடியே நான் கிளம்பத் தீர்மானித்து விட்டேனே, அது உங்களுக்குத் தெரியாதா?"

"அதுதான் அழகு. எனக்கு மறுபடியும் வேலை கிடைத்ததும் உடனே உனக்குக் கடிதத்தில்—கடிதமா? தந்தியில் — தெரியப் படுத்துவேனோ மாட்டேனோ?"

லலிதா சட்டென்று திரும்பிக் கணவனைப் பார்த்தாள். புருஷன் முகத்தில் தோன்றிய சோகம் அவளைத் தூக்கி வாரிப் போட்டது.

"மறுபடியும் வேலையா? ........."

என்று கேட்டாள் லலிதா.

"ஆமாம், எனக்கு வேலை கிடைக்காமலே போய் விடுமா, லலிதா? நாளைக்கு எங்கேயாவது, எப்படியாவது ......" என்று வீரராகவன் சொல்லிக்கொண்டே போகும்போது அவளுக்கு விஷயம் விளங்கிவிட்டது. அவள் முகத்தில் ஓர் அலாதிப் பிரகாசம் உண்டாயிற்று.

பிரகாசம் தோன்றிய முகத்தில் ஒரு வெட்கம் தோன்றிற்று. மறு நிமிஷம் குபீரென்று அழ ஆரம்பித்துவிட்டாள்!

"நிஜமாகவா? ......" என்று கேட்க வந்தவள் நாக்குழறி மேலே பேச முடியாமல் நின்றாள்.

"ஆமாம், நிஜமாகத்தான் வேலை கிடைத்து விடும். அதற்காக ஏன் அழுகிறாய்?" என்று சொல்லிக் கொண்டே லலிதாவின் கையைப் பிடிக்கப் போனான். ஆனால் அவள் அவன் அருகில் வந்து பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்தாள். திடீரென்று லலிதாவின் முகத்தில் அவ்வளவு உணர்ச்சி பெருகுவதேன், அவள் அவ்வளவு சந்தோஷப்படுவானேன் என்று புரியாமல் 'திருதிரு' வென்று விழித்தான் வீரராகவன்.

மறுநாள் அவன் விழிப்பு இன்னும் அதிகமாயிற்று. ஆபீஸிலிருந்துவந்த அக் கடிதத்தைப் பலதடவை படித்து விட்டான். "ஒரு குமாஸ்தா ராஜினமா செய்து விட்டபடியால் மீண்டும் வேலையில் சேரும்படி உம்மைக் கேட்டுக் கொள்கிறேன்" என்று மானேஜர் கையெழுத்துப் போட்டுக் கடிதம் வந்திருந்தது. "லலிதா! இங்கே வந்து பாரேன்!" என்று கத்தி விட்டு மீண்டும் அகல விழித்தான் வீரராகவன். ஆனால் அப்பொழுது அவனையும் அறியாமல் பின் வரும் பாட்டு வெளிவந்து அவனுக்கு திவ்யமான ஹிதத்தைக் கொடுத்தது:

"உப்புமாக் கிண்டச் சொல்லடி ..."





## மல்லு — வஸந்தா

நாம் ஆசைப் படுகிறபடி ஒன்றும் நடப்பதில்லை என்ற விஷயம் எல்லோருக்கும் தெரிந்ததுதான். இருந்த போதிலும், இந்த உண்மையை இன்னும் நன்ருக உணர்த்த வேண்டுமென்பதற்காக பாக்கியலக்ஷ்மி என்னும் தெலுங்குப் படத்தில் ஒரு ஜோடியைச் சிருஷ்டித்திருக்கிருர்கள். மல்லு வீட்டில் பெண்டாட்டியைக் காய்தா பண்ணிக்கொண்டு அதிகாரம் செலுத்த ஆசைப்படுகிருன். ஆனல் பெண்டாட்டி எதிரில் வந்து விட்டாலோ, அவன் ஆசை மட்டுமல்லாமல், ஆளே இருந்த இடம் தெரியாமல் ஒளிந்து கொள்ளும்படி இருக்கிறது!



மல்லுவின் மனைவி வஸந்தாவுக்கு வீட்டில் எப்பொழுதும் ராணியாக விளங்க வேண்டுமென்பதுதான் ஆசை. ஆனல் அவள் ஆசைப்படியே மல்லு என்றைக்கும் தோப்புக்கரணம் போட்டுக் கொண்டிருந்தால், அப்புறம் என்ன ஆகிறது! ஒரு நாள் வஸந்தா கோபத்தில் சாம்பார் சட்டியைப் புருஷன் மேல் போட்டு உடைத்துவிடுகிருள். மல்லு சொல்லிக் கொள்ளாமல் எடுக்கிருன் ஓட்டம்! இந்த சதிபதிகள் வேஷத்தில் என். எஸ். கிருஷ்ணனும், டி. ஏ. மதுரமும் தோன்றுகிருர்களென்ருல், 'பலே மல்லு!' 'சபாஷ், வஸந்தா' என்று வியக்கத் தக்க கட்டங்கள் படத்தில் நிறைய இருக்குமென்பதில் சந்தேகமில்லை.

# கர்நாடக சங்கீத வித்வான்கள்

❀ திருமங்கலம் வைத்தியநாத பாகவதர் ❀

## 24. திருக்கோடி காவல் கிருஷ்ணய்யர்—பிடில்

மகாவைத்தியநாதய்யர் காலத்திலும் சற்றுப் பின்னும் இருந்து பிடில் வாத்யத்தில் உயர்ந்த கௌரவத்தை அடைந்தவர். இவருடைய ஞானத் திறமையைச் சற்றேறக்குறைய மகாவைத்யநாதய்யர் யோக்யதைக்கு ஸமமாகவே சொல்லலாம். ஏனென்றால் ஐயரவர்கள் எந்த துரகாலத்தில் பாடினாலும் அவர்களுடன் சமாளித்துச் சமமாகவே வாசித்தார். இவருடைய சங்கீத ஞானத்தின் ஆழத்தைக் கண்டு பிடிப்பது ரொம்பவும் சிரமம். இவருடைய கச்சேரியை நான் அநேக தடவை கேட்டிருக்கிறேன். எனக்கு முக்கியமாய் வேண்டியவராகையால் என்னிடத்தில் விசேஷப் பிரியம் வகித்து என் ஜாகைக்கு அடிக்கடி கச்சேரி செய்ய வந்திருக்கிறார். இவரைப் பக்கவாத்தியமாக வைத்துக்கொண்டு லட்சியமில்லாமல் பாடக்கூடியவர் மகாவைத்யநாதய்யர் முதலான சிலரே. ஆகையால் இவர் பக்கவாத்தியத்தை வைத்துக் கொள்ளும் வித்வான்கள் பயத்தால் தங்கள் நிஜயோக்யதையில் பாதிதான் வெளிப்படுத்தும்படி நேரிட்டுப் பார்த்திருக்கிறேன்.

ஒரு சமயம் திருப்பாப்புலியூரில் உத்ஸவ சந்தர்ப்பத்தில் கிருஷ்ணய்யரவர்களும் கர்நாடக சங்கீதத்தில் அஸகாய சூரராய் விளங்கின எட்டியாபுரம் ராமசந்திரய்யரவர்களும் சேர்ந்து கச்சேரி செய்தார்கள். நானும் கூடவே இருந்து இந்தக் கச்சேரியைக் கேட்கும்படி நேர்ந்தது. அன்று ராமச்சந்திரய்யர் அவர்கள் "நாதநாமக்ரியை" ராகம் பாடி "எங்கும் நிறைந்தநாத நாமகிருபாநிதே" என்ற பல்லவியையும் பாடினார். ஐயரவர்கள் எவ்வளவு அழகாய்ப் பாடினாலும் கிருஷ்ணய்யர் அவர்கள் கூட வாசித்ததால் அவருடைய யோக்யதை முழுவதையும் வெளியில் பிரகடனப்படுத்த முடியவில்லை. இதனாலேயே அநேக வித்வான்கள் இவருடைய பக்கவாத்தியத்தை வெறுப்பதுண்டு. இவருடைய வாத்தியத்தை மகாவைத்தியநாதய்யருடன் மூன்று தடவையும் வேணுகானம் சரபசாஸ்திரிகளுடன் கூட அநேகம் தடவைகளும் கேட்டிருக்கிறேன். இந்த இரண்டு பேர்களுடைய கச்சேரியில்தான் இவருடைய வாத்தியம் மேல் ஓங்காமல் சமமாக இருந்து கச்சேரி நடைபெறும்.

ஒரு சமயம் சென்னையில் தங்கசாலைத் தெருவிலிருந்த புனர்வசு சபாவில் இவருடைய வாத்தியத்தை வேணுகானம் சரப சாஸ்திரிகளுடனும், சேதுராமராவ் மிருதங்கம்—உமையாள்புரம் நாராயணய்யர் கடத்துடனும் கேட்டேன். அன்று ஒரு விசேஷ சம்பவம் நடந்தது. வழக்கப்படி கீர்த்தனங்கள் ஜோடியாய் வாசித்த பிறகு சாஸ்திரிகள் அவர்கள் காம்போஜி ராகத்தை உபக்ரமம் செய்து ஐந்து நிமிஷம் வாசித்துக் கிருஷ்ணய்யரவர்களிடம் விட்டார். கிருஷ்ணய்யர்வாள் வாசிக்க ஆரம்பம் செய்தவுடன் பிடில் வாத்தியத்தில் சர்வ சாதாரணமாய் வாசிக்கக்கூடிய மத்யம காலத்தை ஆதாரமாய் வகித்து ஜனங்கள் கரகோஷம் அடிக்கடி செய்யும்படி செய்து அபாரமாய் வாசித்து விட்டார். இதைக் கேட்டு ஆனந்தித்துக் கொண்டிருந்த சாஸ்திரிகள் அவர்கள், இனி அதிகமாய் ராகம் வாசிப்பதில் பிரயோஜனமில்லை என்று நினைத்து உடனே பல்லவி வாசிக்க எத்தனம் செய்துவிட்டார். ஐந்து நிமிஷம் அல்லது பத்து நிமிஷத்திற்குள் வீராவேசத்துடன் சாஸ்திரிகள் அவர்கள் வாசித்துக் கிருஷ்ணய்யர்வாளைப் பிரமிக்கச் செய்து ஜனங்களை ஆஹாகாரப்படுத்திஆவர்த்தனத்துக்கு ஆவர்த்தம் கரகோஷத்தைப் பெற்றார். பிறகு இரண்டு மணி நேரம் கச்சேரி நடந்தது. இருவருக்கும் தாரதம்யமில்லாம லிருப்பதைப் பார்த்து ஜனஙகள் சந்தோஷித்தார்கள்.

மற்றொரு சந்தர்ப்பத்தில் கும்பகோணத்தில் சாஸ்திரிவாளும் கிருஷ்ணய்யரவர்களும் சேர்ந்து கச்சேரி நடக்கும்பொழுது கல்யாணி ராகம் வாசித்தார்கள். அதில் ப்ரதிமத்யம ஸ்தானத்தில் ராகத்தை இருவர்களும் மாறி மாறி விஸ்தரித்து வாசித்துக் கொண்டு வரும்பொழுது கிருஷ்ணய்யர்வாள் ரொம்பவும் குதூஹலத்துடன் வாசிக்க, சாஸ்திரிகள் கிருஷ்ணய்யரைப் பார்த்து "இந்த ப்ரதிமத்யம ஸ்தானம்" தங்களுக்குத்தான் சொந்தமானது என்று சொல்லி மெச்சினார் என்றால்

கிருஷ்ணய்யர்வாள் வாசிப்பைப் பற்றி நான் என்ன கூற முடியும்? கிருஷ்ணய்யர் பக்க வாத்யமாக அமைந்து விட்டால், சங்கீத சக்கரவர்த்தியாய் விளங்கின சரப சாஸ்திரிகளும் ரொம்ப சிரமத்தை வஹித்துத்தான் தன் கௌரவத்தை நிலை நாட்டுவார். இதிலிருந்து ஐயரவர்களுடைய வாத்தியத்தின் பெருமை எவ்வளவு என்பதை நன்கு உணர்ந்து கொள்ளலாம். பக்க வாத்தியமாக வாசித்துக் கியாதி அடைவதைக் காட்டிலும் தனியாகக் கச்சேரி செய்து ஜனங்களை ரஞ்சிக்கச் செய்வதில் ரொம்பவும் சமர்த்தர். மிருதங்கம் கூட இல்லாமல் தனியாகப் பிடிலை வாசித்துச் சபையைச் சந்தோஷிக்கச் செய்யும் சக்தி வாய்ந்தவர்.

புதுக்கோட்டை மகாராஜா அவர்கள் காலேஜில் இவர் கச்சேரி, மகாராஜா பிறந்த தினக் கொண்டாட்டத்தைக் குறித்து தக்ஷிணாமூர்த்தி பிள்ளை மிருதங்கத்துடன் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. கச்சேரிக்குக் குறிப்பிட்ட மணிப் பிரகாரம் சரியாய் இரவு 9 மணிக்குக் கிருஷ்ணய்யர்வாள் வந்து விட்டார். சற்று முன்னாடியே மகாராஜா சகோதரர் ரீஜண்ட் ஸாஹேப் அவர்களும் ஜட்ஜுகள் முதலான பெரிய உத்யோகஸ்தர்களும் கூடியிருந்தார்கள். குறிப்பிட்ட நேரத்தில் ஸ்ரீமான் தக்ஷிணாமூர்த்தி பிள்ளை அவர்கள் வரவில்லை. கிருஷ்ணய்யர்வாள் தனியாகவே தம்பூருடன் பிடிலை சுருதி செய்து கொண்டு கச்சேரி செய்ய ஆரம்பித்து விட்டார்.

அன்று சாயங்காலம் நானும் ஒரு கதை செய்ய வேண்டியிருந்ததால் அதை முடித்து விட்டு இவர் கச்சேரிக்கு வந்தேன். மந்திரத் தந்தியில் வில்லைப் போட்டுக்கொண்டு அத்துடன் தன்னுடைய கன சாரீரத்தையும் அமைத்து சங்கராபரண ராகத்தில் "மஹிம தெலிய தரமா" என்ற பல்லவியைப் பாடினார். சபையோர்கள் நிச்சப்தமாய்க் கேட்டு மெய்மறக்கலானார்கள். எவ்வித ஒத்தாசையுமின்றி ஏக சூரராய் விளங்கக் கூடியவர் என்பது இதனால் தெளிவாயிற்று. இவ்வளவு கியாதியுடன் விளங்கினதற்குக் காரணம் இவருடைய ஆழ்ந்த ஞானத்தோடுகூட வாத்தியத்தில் இடைவிடாமல் சாதகம் செய்ததேயாகும். ஒரே தினத்தில் அநேக இடங்களில் கச்சேரி செய்து விட்டு வீடு வந்து சேர்ந்தவுடன் போஜனத்தை முடித்துக்கொண்டு சிரமத்தைப் பாராட்டாமல் உடனே பிடிலை வைத்துக்கொண்டு சாதகம் செய்ய எத்தனம் செய்வார்.

ஒரு உத்ஸவத்திற்குத் திருக்கோடிகாவலில் நான் கதை செய்யும்படி நேரிட்டது. அன்று அவர் மிக்க பிரியத்துடன் என் கதைக்கு வந்து முற்றிலும் இருந்து கௌரவப்படுத்திச் சந்தோஷித்தார். கதை முடியும் பொழுது இரவு சுமார் 12 மணியிருக்கலாம். என்னை அவர் ஜாகைக்கு வரவேணுமென்று அபேட்சித்தபடியால் என் போஜனத்தை முடித்துக்கொண்டு சுமார் 2 மணிக்கு அவர் ஜாகைக்குச் சென்றேன். உடனே அவர் தன் வாத்யத்தை எடுத்துக்கொண்டு வாசிக்கலானார். சூரியோதய பரியந்தம் இடைவிடாமல் வாசித்து என்னை மிகவும் பிரமிக்கும்படி செய்து விட்டார். விடாமுயற்சியுடன் ஸதா சர்வகாலமும் நாதப்பிருமமத்தில் மனதை ஈடுபடுத்தி மற்ற சுகங்களைக் கருதாமல் ஸாதகம் செய்து காலம் கழித்து வந்தார். ஸ்ரீ தியாகப்பிரும்ம கீர்த்தனங்களில் விசேஷப் பரிச்சியமுள்ளவராகையால் இவர் ராகம் வாசிக்கும் காலத்தில் ஸ்ரீ ப்ரும்மம் கீர்த்தனங்களில் சஞ்சாரித்திருக்கிற ராக பாவங்கள் தோன்றி ராகத்தின் உயர்ந்த பாணியை வெளிப்படுத்தும். இவ்வளவு யோக்யதை உள்ள இவர் குதூகலத்துடன் தன் ஊர் கிராம முனிசிப் வேலையை வகித்துப் பார்த்து வந்தார்.

---

## நல்ல அநுபவம்!



**எஜமான் :**—ஏண்டா வேணு, பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு வேலைக்குப் போகணும் என்கிறியே, உனக்கு என்னடா அநுபவம் இருக்கு?

**வேலைக்காரன் :**—என்னுங்க, அப்படிச் சொல்லிட்டீங்க! நம்ம வீட்டிலே மூணு வருசம் இருந்திருக்கேனே, அது போதாதா?

# கம்பர் தரும் காட்சி

[ டி. கே. சிதம்பரநாத முதலியார் ]

## 38. அயோத்திதானா இது?

**ரா**மன் காட்டுக்குப் போகிறான் என்கிற செய்தி எல்லாருக்கும் தெரிந்து விட்டது. தசரதனுடைய ஆசை நாயகிகள் பலர்: அவர்கள் எல்லாரும், ராமனையே பெற்ற பிள்ளையாகப் பாவித்து வந்தார்கள். ராமனும் அவர்களைத் தாய்மாராகவே பாவித்து வந்தான். ராமன் காட்டுக்குப் போகிறான் என்றால் அவர்களால் சகிக்கக்கூடிய காரியமா?

**அறுபதி னாயிரர்**
**அரசன் தேவியர்,**
**மறுவறு கற்பினர்,**
**மழைக்கண் நீரினர்,**
**சிறுவனைத் தொடர்ந்தனர்;**
**சிந்தை மாழ்கினர்;**
**எறிதிரைக் கடல்என**
**இரங்கி ஏங்கினார்.**

[அறுபதினாயிரர் அரசன் தேவியர்: அரசனது ஆசை நாயகிகள் அறுபதினாயிரம் பேர்; (அறுபதினாயிரம்: ஏதோ பல என்று குறிக்கும் அடையாள எண்); மழைக்கண் நீரினர்: கண்ணாங் கரேல் என்றிருந்த கண்களிலிருந்து கண்ணீர் வடித்தவராய்; சிறுவனைத் தொடர்ந்தனர்: பிள்ளையாகிய ராமனைப் பின் தொடர்ந்தனர்; சிந்தை மாழ்கினர்: மனசு உடைந்தவராய்; எறிதிரைக் கடல் என: மோதுகிற அலை கொண்ட கடலைப்போல; இரங்கி ஏங்கினர்: வருந்தி அலறினார்கள்.]

அந்தப் பெண்களுடைய மேனியும் ஆடையும் எத்தனையோ விதமாக அழுகு செய்தன. அவர்கள் அழுது அரற்றும்போது குயில்கள் பலவிதமாய்க்கூவினது போலிருந்தது. தள்ளாடித் தள்ளாடி நடந்ததோ, சிறை இழந்து பூமியில் நடக்கும் மயில் குயில் அன்னம் இவைகளை நினைப்பூட்டின. ஆங்காங்கு இடறி விழுந்து தரையில் அவர்கள் புரளுகின்றனர்.

**கன்னிநல் மயில்களும்**
**குயில்க் கணங்களும்**
**அன்னமும், சிறையிழந்(து)**
**அவனி சேர்ந்தன**
**என்ன,வீழ்ந்(து) உழந்தனர்,**
**இராமன் அல்லது**
**மன்னுயிர்ப் புதல்வரை**
**மற்றும் பெற்றிலர்.**

[அவனி சேர்ந்தன என்ன: தரையில் வந்து சேர்ந்ததை ஒத்து.]

இந்த மகளிர் ராமனைப் பார்த்து, தாங்களும் காட்டுக்கு வருவதாகச் சொல்லுகிறார்கள்.

**'புகல்இடம் கொடு,வனம்**
**போதும்' என்றுதம்**
**மகன்வயின் இரங்குறு**
**மகளிர் வாய்களால்,**
**அகல்மதில் நெடுமனை,**
**அரத்த ஆம்பல்கள்**
**பகலிடை மலர்ந்ததோர்**
**பழனம் போன்றவே.**

[புகலிடம் கொடு: நாங்கள் பிழைத்திருக்கிறதற்கு வழி செய்; வனம் போதும்: நாங்களும் உன்னுடன் காட்டுக்கு வருகிறோம்; இரங்குறும் மகளிர் வாய்களால்: கெஞ்சுகிற அவர்களது திறந்த வாய்கள் பலவாய் இருப்பதால்; அகல் „ தில் நெடுமனை: பலத்த மதிளால் சூழப்பட்ட அரண்மனை முற்றமானது: அரத்த ஆம்பல்கள்: செவ்வாம்பல் புஷ்பங்கள்; பகலிடை மலர்ந்ததோர் பழனம் போன்றவே: இரவில் மலர்வதற்குப் பதிலாகப் பகலிலேயே மலர்ந்துள்ள நீர் நிலை போலிருக்கிறது.]

அரண்மனை முற்றத்தை விட்டு வீதிக்கு வந்துவிட்டான் ராமன். அவன் மரவுரியைச் சுற்றிக்கொண்டு தெருவழியாகக் காலால் நடந்து போவதைப் பார்க்கிறார்கள். எப்படியிருக்கும் பார்ப்பவர்களுக்கு?

**நல்நெடு மணிமுடி**
**சூட, நன்மணிப்**
**பொன்நெடுந் தேரொடும்**
**பவனி போனவன்,**

துன்நெடுஞ் சிரையும்
சுற்றி மீண்டும்அப்
பொன்நெடும் தெருவிடைப்
போதல் மேயினன்.

[நல்நெடு மணிமுடி சூட : நல்ல அழகிய ரத்தின முடி சூடுவதற்காக; நன்மணிப் பொன் நெடுந்தேரோடும் பவனி போனவன் : அடடா! ரத்தின கசிதமான தேரில் போனானே அன்று அவனே; துன் நெடுஞ் சிரையுஞ் சுற்றி : நாம் நெருங்கிய மர வரிசைச் சுற்றிக்கொண்டு; அப் பொன் நெடும் தெருவிடைப் போதல் மேயினன் : அலங்கரிக்கப்பட்ட தெரு வழியாகச் செல்லுகிறான்.]

ஜனங்கள் பார்த்துச் சொல்லுகிறார்கள் : ராஜ்யபாரப் பொறுப்பையெல்லாம் ஏற்றுக் கொண்டு ராமன் நம் கண்ணுக்கு உவந்தவனாய் இந்த வீதி வழியாக வருவான் என்றல்லவா எதிர் பார்த்துக் கொண்டிருந்தோம்? ரொம்ப அழகு நம்முடைய காரியம்!

'மண்கொடு வரும்என
வழியி ருந்த(து)யாம்,
எண்கொடு சுடர்வனத்(து)
ஏகல் காணவோ?
பெண்கொடு வினைசெயப்
பெற்ற நாட்டினில்
கண்கொடு பிறத்தலும்
கடை'என் றார்சிலர்.

[மண் கொடுவரும் என : ராஜ்ய பாரத்தை ஏற்றுக்கொண்டு வருவான் என்று; எண்கொடு சுடர் வனத்து ஏகல் காணவோ : புத்தி பேதிக்காமல் நல்ல நினைவோடு, ராமன் வெய்ய கானத்துக்குப் போவதைக் காணவோ (வழியில் காத்திருந்தோம்?) பெண்கொடு வினை செயப்பெற்ற நாட்டினில்: கைகேயியாகிய ஒரு பெண்ணைக் கொண்டு அரசு செய்கிற இந்த நாட்டினில்; கண்கொடு பிறத்தலும் கடை; கண்ணோடு பிறத்தலும் கேடுதான்; ராமன் காட்டுக்குப் போவதை நம்முடைய கண் பார்த்துத் தீர வேண்டுமே.]

ராமன் காட்டுக்குப் போகிறான் என்கிற செய்தி வீட்டுக் குள்ளிருக்கிற பெண்டுகளுக்குத் தெரிந்து விட்டது. துயரத்தினால் செயலற்றுச் சோர்ந்து கிடக்கிறார்கள். சமையல் ஏது அங்கே!

அட்டிலும் இழந்தன
புகை; அகில்புகை
நெட்டிலும் இழந்தன;
நிறைந்த பால்,கிளி
வட்டிலும் இழந்தன;
மகளிர் கை,மணித்
தொட்டிலும் இழந்தன
மகவும் சோரவே.

[அட்டிலும் இழந்தன புகை : சமையல் அறையிலிருந்து புகை எழவில்லை; அகில் புகை நெட்டிலும் இழந்தன : குளித்தவுடன் கூந்தலுக்குப் புகை விடுவார்கள் பெண்கள். உப்பரிகைகளி லிருந்து இப்போது அந்த அகில் புகை வரவில்லை; நிறைந்த பால் கிளி வட்டிலும் இழந்தன : கிளிக் கூட்டின் கிண்ணங்களில் பால் வார்க்க மறந்து விட்டார்கள்; மகளிர் கை மணித் தொட்டிலும் இழந்தன : தெருவில் போகிறவர்களுக்கு வீட்டுக்குள் ஒரு அழகான காட்சி தோன்றும்; அதாவது குழந்தைகளின் அழகான தொட்டிலை, வளைய ணிந்த கையைக் கொண்டு பெண்கள் ஆட்டுகிற காட்சிதான்; இப்போது அந்த அழகிய காட்சியைக் காணவில்லை. மகவும் சோரவே: குழந்தை அழுதுகொண்டு இருக்க.]

அயோத்தி ஜனங்கள் எப்போதும் ஒரே உத்ஸாகமாக இருப்பார்கள். நடனம் என்ன, பாட்டோடு யாழ் வாசிக்கும் நயம் என்ன, தேவர்களுக்காக சதா விழா எடுக்கும் ஆரவாரந்தான் என்ன! இப்போது அவைகள் எங்கே போய் விட்டன!

முழு(வு)எழும் ஒலியில,
முறையின் யாழ்நரம்(பு)
எழஎழும் ஒலியில,
இமைப்பில் கண்ணினர்
விழ(வு)எழும் ஒலியில,
வேறும் ஒன்றில,—
அழஎழும் ஒலியல(து)
அரச வீதியே.

[முழுவு எழும் ஒலியில : நடனத்துக்கு உரிய மத்தளத்தின் ஓசையில்லை: முறையின் யாழ் நரம்பு : சுருதி ஒத்து வாசிக்கும் யாழின் நரம்பிலிருந்து; இமைப்பில் கண்ணினர் : தேவர்களுக்காக; விழவு எழும் ஒலியில : திருவிழாக் கொண்டாடும் ஆரவாரம் இல்லை; அழ எழும் ஒலியலது : ஜனங்களது அழுகைக் குரல் அல்லாமல் வேறொரு சப்தமும் இல்லை— அரச வீதியில்.]

ஒரே அழுகையாய்ப் போய் விட்டது அயோத்தி. அங்குள்ள மக்களுக்கு ராமன் உயிருக்குயிராய் இருந்தான் என்பதைக் காட்டுகிறதற்கு வந்த செய்யுளும் ஒரே அழுகை மயமாய் இருக்கிறது. செய்யுளின் ஓசை எல்லாம் அழுகிற சப்தத்தை நோக்கிச் செல்லுகிறது.

## வடலூர் அறிக்கை

வடலூரில் இந்த வருஷ தைப்பூசத் திருநாளும் சத்திரங்களில் ஆகார வசதியும் நிறுத்தப்பட்டது. போலி விளம்பரங்களைத் தேவஸ்தான தர்மகர்த்தர்களும், திருப்பணிக் கமிட்டியாரும் கண்டித்து ஜனங்களுக்கு ஏமாறுதிருக்க எச்சரிக்கை செய்கிறார்கள். திருப்பணிக்கு அமாவாசை பரதேசியாரை விலக்கி ஸ்ரீ கிருபாநந்த வாரியாரை நியமித்து, சர்க்கார் அனுமதித்த கமிட்டியின் மூலம் திருப்பணி நடந்து வருகிறது.

மணியார்டர் மூலம் பணத்தையும் ரயில்வழி இனத்தையும் அனுப்பும் அன்பர்கள் நேரே தலைவர் அவர்களுக்குத்தான் அனுப்பவேண்டும். கமிட்டியிலுள்ள ஏனையவர்க்கோ தலைவர் அதிகாரம் பெற்று வரும்பவர்களுக்கோ அனுப்புதல் கூடாது. கமிட்டியின் பேரால் தலைவரது அதிகாரம் பெற்று பணம், இனம் கேட்கவரும் எவரிடமும் கொடுக்கும் வகைக்கு, உடன் தலைவர் கையெழுத்துள்ள ரசீது வாங்கிக் கொள்ளவேண்டும். தலைவரது அதிகாரம் பெறாதவர்களிடம் எதையும் கொடுக்கக் கூடாது. சாமான்களை மட்டும் நேரே வடலூர் ரயில்வே ஸ்டேஷனுக்கு அனுப்பி, ரசீதை தபாலில் தலைவர் பெயருக்கு வடலூரிலுள்ள திருப்பணி கமிட்டி ஆபீஸிற்கும், மணியார்டர்களை தலைவர் பெயருக்கு கடலூர் என்.டி.க்கும் அனுப்ப வேண்டுகிறோம்.

திருப்பணி கமிட்டி தலைவர் விலாசம்
கே. சீதாராம ரெட்டியார்
பி.ஏ., பி.எல்., எம்.எல்.ஏ., (டில்லி)
ஜில்லா போர்டு தலைவர், கடலூர் என்.டி.

இப்படிக்கு கமிட்டி செயலாளர்கள்.
பு. வே. தேவராஜ முதலியார், M.D. (s)
தி. கி. நாராயணசாமி நாயுடு.


ஆ மந்திராக்காளி! இதோ உனக்கு ஒன்று வரவழைக்கிறேன் பார்!


2.
இதோ ஆப்பிள் பழம்!


3.
ஆ மந்திராக்காளி!


4.
இதோ ஒரு முத்துமாலை!


5.
ஆ மந்திராக்காளி!


6.
இதோ வாசனைத் தயிலம்!


7
ஆ மந்திராக்காளி!


8.
இதோ அசோகா பாக்குத்தூள்!


9.
மகாஜனங்களே! முதல் மூன்று வித்தைகளை உங்களால் செய்ய முடியாது. ஆனால் அசோகா பாக்குத்தூள் வரவழைக்கும் வித்தையை எந்த நிமிஷமும் உங்களால் செய்ய முடியும். ஏனென்றால் மகாஜனங்களே! அசோகா பாக்குத்தூள் எங்கும் கிடைக்கும்!



Regd. No. M. 4392

ரேடியோ என்ற பெயரிலேயே




முதன்மையானது மகத்தானது

## மாடல்கள் 822, 1942 மாடல்

## எட்டு வால்வ் ஸூபரெட் பாட்டரி வைபரேடர் டேபிள் மாடல்

உங்கள் வீட்டில் எலெக்ட்ரிக் மெயின் சப்ளை இல்லை என்றாலும் பாதகமில்லை. இந்த பூலோகத்தின் ஸகல அதிசயங்களையும் ஆனந்தங்களையும் இப்புதிய பாட்டரி வைப்ரேடர் மாடலில் கேட்டு அனுபவிக்கலாம். இது தேவையான 'கரன்ட்'டை ஒரு ஆறுவோல்ட் பாட்டரியிலிருந்து பெற்றுக் கொள்கிறது. ஆனால் மெயின் சப்ளையிலிருந்து எடுக்கும் கரன்டினால் வேலைசெய்யும் மாடலைப்போலவே அற்புதமாக வேலைசெய்கிறது. இப்பரந்த உலகில் நடக்கும் பற்பல 'பிராட்காஸ்ட்'களையும் தத்ரூபமாகக் கேட்டு ஆனந்திக்கலாம்.

### விவரங்கள்

வேவ் ரேஞ்ச்: 13.5-90 முதல் 190-565 மீட்டர் வரை. * வர்னியர் ஸ்கேலுடன் கூடிய ஹை ரேஷியோ ட்யூனிங் * தொடர்ந்து மாறும் ட்யூன் கன்ட்ரோல் * ஆடோமாடிக் வால்யூம் கன்ட்ரோல் * கரன்ட் சப்ளை: 6 வோல்ட் கார் டைப் பாட்டரி



கன்ஸம்ஷன்: சுமாராக 1-6 ஆம்பியர். லௌட்ஸ்பீகர் 8½" அங். டையா பெர்மனென்ட் மாக்னெட் கூடிய ஸர்குலர். அவுட்புட் 2.8 வாட்ஸ் (மாக்ஸிமம்) எக்ஸ்டரா லௌட் ஸ்பீகருக்கும், கிராமபோன் பிக்கப்புக்கும் ஸாக்கட்டுகள்

**பாட்டரி நீங்கலாக விலை ரூ. 545**

சென்னை ராஜதானிக்கு (சமஸ்தானங்கள் உள்பட) பிரதான டீலர்கள்:

ஸூபர் ரேடியோ கம்பெனி லிமிடெட், மௌன்ட்ரோடு, மதராஸ்

# மார்க்கோனிபோன்

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:

## ஸ்ரீ ராம விலாஸ் ஸர்வீஸ் லிமிடெட்.,

மௌன்ட் ரோடு :: மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.